நிழல்படு நெடுவே லேந்தி யொன்னா
ரொண்படைக் கடந்தார் முன்புதலைக் கொண்மார்
நசைதர வந்தோர் நசைபிறக் கொழிய
வசைபட வாழ்ந்தோர் பலர்கொல் புரையி
னற்பனுவ னால்வேதத்
தருஞ்சீர்த்திப் பெருங்கண்ணுறை
நெய்ம்மலி யாவுதி பொங்கப் பன்மாண்
வீயாச் சிறப்பின் வேள்வி முற்றி
யூப நட்ட வியன்களம் பலகொல்
யாபல கொல்லோ பெரும வாருற்று
விசிபிணிக் கொண்ட மண்கனை முழவிற்
பாடினி பாடும் வஞ்சிக்கு

அ - க௦. புறநா. கக : அ ; உ௩ : க - ௨.

கஉ. புறநா. கச : ௩.

கச. கொண்மார் : முருகு. கஎ௩.

கரு. 'பிறக்கு' என்பது
தொல். இடை. ௩. ௩௦ -

அசைநிலையாக வருமென்பதற்கு மேற்கோள் ;
பேர் ; ... ; இ - வி. ரு.
உள்ள - உரை.

கஅ. கண்ணுறை: புறநா. ௪க : ௫; க௪௦: ௪.

க - உக. "கடுந்தேர் .....எயில" என அவ்வெயிலழித்தவாறு கூறி, 'வீயாச் சிறப்பின் .... நாட்டி' எனவே ஒருவாற்றான் மண்ணணியவாறுங் கூறியவாறு

காணக" தோல். புறத்திணை. ௩. ௩௦ - ௩.

உஉ. "காழிலாவறபததுகா எகெறுககலையா றும, வாழிவெள றுவெள றலைகடலவரைப்பெலா காட்டுங, கேழிஉ வாங்கைய மதிலயுங இளமறை மூறை யான், வேழவியாறறிய பூபமும் விறநதுஎ வலேகம" காஞ்சிப். நகரேறறுப். கஅ௩.

கரு - உஉ. சிறப்பினு அஃறிணைமுடிபேற்றதறகு நன்-மயிலை. சூ. ௩௭௭ ; நன்-வி. சூ. ௩௭௮ ; இ - வி. ௩.

மேறகோள ;
உகஅ-உரை.

உச. புறநா. ௩௩ : ௧௦.

.கூ புறநானூறு மூலமும் உரையும்.

உடு ஊடல் சான்ற மைந்திணேய் நினக்கே.

திணையுந் துறையும் அவை.

* பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைநெட்டிமை யார் பாடியது.

இ - ள்.—விரைந்த தேர் குழித்த தெருவின்கண்ணே வெளிய வாயையுடைய கழுதையாகிய புல்லிய நிரையைப் பூட்டி உழுது பாழ்படுத்தினை யவருடைய அகலிய இடத்தையுடைய நல்ல அரண்களை; புள்ளினங்களொலிக்கும் புகழமைந்த விளைகழனிக்கண்ணே வெளிய தலையாட்டமணிந்த னஞ்செருக்கிய குதிரையினுடைய கவிந்த குளம்புகள் தாவத் தேரைச் செலுத்தினை நின்னுடைய பகைவர் தேயத்துக்கண; அசைந்ததன்மையோடு பெரியகழுத்தினையும் பரந்த அடியோடு வெகுட்சிபொருந்திய பார்வையினையும் விளங்கிய கோட்டினையுமுடைய களிற்றை அப்பகைவருடையன வாகிய காவலையுடைய வாவிக்கட் படிவித்தனை; அப்பெற்றிப்பட்ட சின ; துடனே அதற்கேற்ற செய்கையையுடையை; ஆதலான் விளங்கிய இரும்பாற் செய்யப்பட்ட ஆணியும்பட்டமும் அமைந்த அழகுமிக்க பலகையுடனே நிழலுண்டாகிய நெடிய வேலை எடுத்துப் பகைவர் ஒள்ளிய படைக்கலங்களையுடைய நினது விரைந்த தூசிப்படையின்வலியைக் கெடுத்தல்வேண்டித் தம் ஆசைகொடுவர வந்தோர் அவ்வாசை பின் ஒழிய வசையுண்டாக உயிர் வாழ்ந்தோர் பலரோ? குற்றமிலலாத நல்ல தருமநூலினும் நாலவகைப்பட்ட வேதத்தினுஞ் சொல்லப்பட்ட எய்தற்கரிய மிகக புகழையுடைய சமிதையும் பொரியும் முதலாகிய பெரிய கண்ணுமறயோடு நெய்மிக்க புகை மேன் மேற்கிளரப் பலமாட்சிமைப்பட்ட கெடாத தலைமையையுடைய யாகங்களை முடித்துத் தூணநடப்பட்ட அகன்ற வேள்விசசாலைகள் பலவோ? இவற்றுள், யாவையோ பல? பெரும! வாரபொருநதி வலித்துக்கட்டுதலைப் பொருநதிய மார்ச்சனை செறிந்த தண்ணுமையையுடைய விறலிபாடும் மேற்செலவிற்கு ஏற்ப, ஆராய்தலமைந்த வலியையுடையோய்! நினககு.—எ - று.

பூட்டி என்னும் வினையெச்சத்திற்கு உழுதென்னுஞ்சொல தந்துரைக் கப்பட்டது. நற்பனுவலாகிய நாலவேதமெனபாருமுளர். நற்பனுவல நால வேதத்து வேள்வியென இயையும்.

பெரும, மைந்திணேய், பாழசெய்தனை ; தேர்வழங்கினை ; கயம்படிவினை ; ஆகலின், நினக்கு ஒன்றாகிய வசைபடவாழ்ந்தோர்

பலர்கொல் ? யூபம்கட்ட வியன்களம் பலகொல் ? இவற்றள், யா பலகொலலோவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

விளங்குபொஃனெறிநதவென்பதற்குக் கண்ணாடிதைத்த வெளினும் அமையும். தார் முன்பு தலைக்கொணமாரென்பதற்குத் தாரை வலியால தலைப்படவெனினும் அமையும்.

புரையுநற்பனுவலென்பதூஉம்பாடம்.

யாபலவென இவ்விரண்டின்பெருமையும் கூறியவாறு.

இவை எப்பொழுதுஞ்செய்தல இயலபெனக்கூறினமையின், இஃது இயன்மொழியாயிற்று. (கரு)

* இப்பாட்டின் உ0 - உக ஆம் அடிகளால தலைவனுடைய பெயர்க் காரணம் புலப்படுகின்றது.

# புறநானூறு மூலமும் உரையும்.

கஎ (கசா.) வினைமாட்சிய விரைபுரவியொடு
மழையுருவின தோல்பரப்பி
முனைமுருங்கத் தலைச்சென்றவர்
விளைவயல் கவர்பூட்டி
மனைமரம் விறகாகக்
கடிதுறைநீர்க் களிறுபடீஇ
யெல்லுப்பட விட்ட சுடுதீ விளக்கஞ்
செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரிற் றோன்றப்
புலங்கெட விறுக்கும் வரம்பி றானை
துணைவேண்டாச் செருவென்றிப்
புலவுவாட் புலர்சாந்தின்
முருகற் சீற்றத் துருகெழு குருசின்
மயங்குவள்ளை மலராம்பற்

நாம நல்லமர் செய்ய
வோராங்கு மலைந்தன பெருமநின் களிறே.*

திணை - வஞ்சி ; துறை - மழபுலவஞ்சி.

சோழன் இராசசூயம்வேட்டபெருநற்கிள்ளியைப் பாண்டரங்கண்ணனார் பாடியது.

இ - ள்.—போரிற்கு நன்மையையுடையவாகிய விரைந்த குதிரையுடனே முகிலபோலுநிறத்தையுடைய பரிசையைப பரப்பி, முனையிடமகலங்க மேற்சென்று, அவரது நெலவிளைகழனியைக கொள்ளைகூட்டி, மனையிடத்து மரமே விறகாகக் காவற்பொய்கைகளின் நீரிலே களிற்றைப் படிவித்து, விளக்கமுண்டாகஇடப்பட்ட நாடுசுடுநெருப்பினது ஒளிதானே விடுகின்ற கதிரையுடைய ஞாயிற்றினது செககர்நிறம்போலத் தோன்ற இடமில்லையாகச் சென்றுவிடும் எல்லையில்லாத படையினையும், துணைப்படைவேண்டாதபோர் வெற்றியினையும், புலாலுறும் வாளினையும், பூசிப்புலர்ந்த சாந்தினையும், முருகனது வெகுட்சிபோலும் வெகுட்சியினையுமுடைய உட்குப்பொருந்திய தலைவ! ஒன்றோடொன்றுகலந்த வள்ளையையும் மலர்ந்த ஆம்பலையும் குளிர்சசியையுடைய பகன்றையையும் பழத்தையுடைய பாகலையுமுடைத்தாகிய கரும்பல்லது பிறிதுகாடறியாத பெரிய மருதம் பாழாகக காவலையுடைய நல்ல நாட்டை ஒள்ளிய தீயை ஊட்டி அஞசத்தகக நல்ல போரைச செய்ய நின்கருத்திறகேற்ப ஒரு பெற்றிப்பட்டபொருதன, பெரும! நின்னுடைய களிறுகள.—எ - று.

தோலபரப்பியென்பது முதலாகிய வினையெச்சங்களை இறுக்குமென்னும் பெயரெச்சவினையொடு முடிதது, அதனைத் தானையென்னும் பெயரோடு முடிக்க. பாகற்றணபணையென இயையும். எலலுபபடஇட்ட சுடுதீயென்ற . தனைத் தானைக்கு அடையாககுக.

கலர்பூட்டியென பதற்கு விரும்பிக் கொள்ளைபூட்டியெனவும், புலங் கெடவென்பதற்கு நாடழியவெனவும், புலவுவாளென்பதற்குப் புலாலுடைய வாளெனவும் உரைப்பினும் அமையும்.

குருசில, பெரும, நீ அமர்செய்ய, நின்களிறு ஓராங்குமலைந்தனவென வினைமுடிவுசெய்க.

பாகல = பலாவென்று உரைப்பாருமுளர்.

ஏமகன்றுடொளளெரியூட்டியென்றதனை, இது மழபுலவஞ்சியா யிற்று.
(கசு)

---

* இப்பாட்டினை, எரிபரந்தெடுத்தலென்னும் துறைக்கு காட்டுவார் தொல். புறத்திணை. சூ. எ - இளம்; ஷை ஷை

உதாரணமாகக்
சூ. அ - ந.

## புறநானூறு மூலமும் உரையும்.

௩௬

(கஎ.) தென்குமரி வடபெருங்கற்
குணகுடகட லாவெல்லை
குன்றுமலை காடுநா
டொன்றுபட்டு வழிமொழியக்
கு கொடிதுகடிந்து கோறிருத்திப்

படுவதுண்டு பகலாற்றி
இனிதுருண்ட சுடர்நேமி
முழுதாண்டோர் வழிகாவல
குலையிறைஞ்சிய [1] கோட்டாழை
யகல்வயன் மலைவேலி
நிலவுமணல் வியன்கானற
றெண்கழிமிசைச் சுடர்ப்பூவிற்
றண்டொண்டியோ ரடுபொருந
மாப்பயம்பின் பொறைபோற்றாது
நீடுகுழி யகப்பட்ட
பீடுடைய வெறுழ்முன்பிற்
கோடுமுற்றிய கொல்களிறு
நிலைகலங்கக் குழிகொன்று
கிளைபுகலத் தலைக்கூடியாங்கு
நீபட்ட வருமுன்பிற்

---

க. செய்யுளில் இனமில்லாத இடப்பெயர் அடைபடுத்து வந்ததற்கு மேற்கோள்: நன் - மயிலை. ,. ௪00.

க - ௪. "தென்குமரி வடபெருங்கல், குணகுடகடலாவெல்லைத், தொன்றுமொழிந்து தொழில் கேட்ப" மதுரை. ௭0 - ௭௨.

கக. "நிலவெக்கர்" (பொருந. உகரு); "நிலாவின் இலங்கு மணன்மலி மறுகு" (அகநா. உ00.) நிலவுமணல் வியன்கானல் என்பது வஞ்சியடிக்கு மேற்கோள்; தொல். செய். ரு. க௪ - பேர்; ந.

க0 - கக. இயற்சீர் தூங்கிவந்தவொன்பதற்கு மேற்கோள்; தொல். செய். ரு. உ௬ - பேர்; ந.

கரு. தொண்டி - இஃது சேரநாட்டிற் கடற்கரைக்கண்ணதொரு

பட்டினம்.

கச-கூ. "அருங்கலை கவியக குதரக குழிகொளமறு, பெருங்கையானை பிடிபுக்காகு" பட்டின. உஉரு - ௪.

(பி - ம்.)— 1 'காய்ததாழை'



பெருந்தளர்ச்சி பலருவப்பப்
பிறிதுசென்று மலர்தாயத்துப்
பலர்நாப்பண் மீக்கூறலி
னுண்டாகிய வுயர்மண்ணுஞ்
சென்றுபட்ட விழுக்கலனும்
பெறல்கூடு மிவனெஞ் சுறப்பெறி னெனவு
மேந்துகொடி யிறைப்புரிசை
வீங்குசிறை வியலருப்ப
மிழந்துவைகுது மினிநாமிவ
னுடன்றுநோக்கினன் பெரிதெனவும்
வேற்றரசு பணிதொடங்குநின்
னாற்றலொடு புகழேத்திக்
காண்கு வந்திசிற பெரும வீண்டிய
மழையென மருளும் பஃறோன் மலையெனத்
தேனிறை கொள்ளு மிரும்பல் யானை
யுடலுந ருட்க வீங்கிக் கடலென
வானீர்க் கூக்குந் தானை யானாது
கடுவொடுங் கெயிற்ற வரவுத்தலை பனிப்ப
விடியென முழங்கு முரசின்

௪0 வரையா வீகைக் குடவர் கோவே.

திணை - வாகை ; துறை - அரசவாகை ; இயன்மொழியுமாம்.

பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்றநெடுஞ்செழியனாற் பிணியிருந்த யானைக்கட்சேய் மாந்தரஞ்சேரலிரும்பொறை வலிதிற் போய்க்கட்டிலெய்தினானைக் 1 குறுங்கோழியூர்கிழார் பாடியது.

இ - ள்.—தென்றிசைக்கட் குமரியும் வடதிசைக்கண் இமயமும் கீழ்த்திசைக் கண்ணும் மேற்றிசைக்கண்ணுங் கடலும் எல்லையாக நடுவுபட்ட

---

௩௩. செயமக ரூவமவினைமுறை வினைகொணடுமுடிந்ததற்கு மேற்கோள்; தொல். வினை. ௩. எ - ந.

௩௪. புறநா. ௧௯ : ௨ - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க; 'தோல' என்பது பரிசை என்னும் பொருளில் வந்ததற்கு மேற்கோள் ; சிலப். ௫ : ௮௧ - அடியார்.

௩௬ - எ. "படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி" முல்லை.௨௮.

௩௮ - ௯. பாம்பு இடிக்கு அஞ்சுதல்: புறநா. ௨௧௧: ௧-௪. "விரிநிறநா கம் விடருள தேனும், உருமின் கடுஞ்சினஞ் சேணின்று முட்கும்" நாலடி. ௧௬௪.

௪0. "ஓம்பாவீகையின்" பதிற். ௪௨.

(பி - ம்.)—1 'குறுங்கோளியூர்'

நிலத்துக் குன்றும் மலையும் காடும் நாடும் என இவற்றையுடையோர் ஒரு பெற்றிப்பட்டு வழிபாடு கூறத் தீத்தொழிலைப்போக்கிக் கோலைச் செவ்வி* தாக்கி ஆறிலொன்றாகிய இறையை உண்டு நடுவுநிலைமையைச்செய்து தடையின்றாக உருண்ட ஒளியையுடைய சக்கரத்தால் நிலமுழுதையும் ஆண்டோரது மரபைக் காத்தவனே! குலைதாழ்ந்த கோட்புக்க தெங்கினையும் அகன்ற கழனியையும் மலையாகிய வேலியையும் நிலாப்போன்ற மணலையுடைய அகன்ற கடற்கரையையும் தெளிந்த கழியிடத்துத் தீப்போலும பூவினையுமுடைய குளிர்ந்த தொண்டியிலுள்ளோருடைய அடுபொருந! யானை படுக்குங்குழிமேற்பாவின பாவைத் தளமனச்செருக்காற் பாதுகாவாது ஆழத்தாலே நெடியகுழியிற் கண்ணே அகப்பட்ட பெருமையையுடைத்தாகிய மிக்கவலியையுடைய கொம்புமுதிர்ந்த கொலைக்களிறு அதன் நிலைசரியக் குழியைத்தூர்த்துத் தன்னினம்விரும்பத் தன்னினத்திலே சென்று போந்தின்றாற்போலப் பொறுத்தற்கரிய வலியாற் பகையைமதியாது நீயுற்ற பெரியதளர்ச்சி நீங்கப் பிறிதொரு சூழ்ச்சியாற் போய்ப் பலருமகிழப் புகுந்த உரிமையையுடைய இடத்தின் நின்சுற்றத்தார் பலர்க்குநடுவே உயர்த்துச் சொல்லப்படுதலால், நீ செழியனாற் பிணிப்புண்பதற்கு முன்பு நின்னாலழிக்கப்பட்டுப் பின்பு தம்மரசுவௌவாது நின்வரவுபார்த்திருந்த அரசர் நமதாய் இவனாற்கொள்ளப்பட்டு உண்டு அடிப்பட்டுப்போந்த மேம்பட்ட நிலமும் இவனாற் பெறற்கரிய சீரிய அணிகலமும் கிடைத்தலுண்டாம், இவனது நெஞ்சு நமக்கு உரித்தாகப்பெறினென நினைந்தும், நின் வரவுபார்த்திராது தம்மரசுவௌவிய பகைவர் எடுத்தகொடியையுடைய உயர்ந்த மதிலையும் மிக்க காடும் அகழும் முதலாய காவலையுடைய அகலிய அரணினையும் நாம் இனி இழந்துதங்குவேம், இவன் நம்மை வெகுண்டுபார்த்தானென மிகவென நினைந்தும் பகைவேந்தர் ஏவல செய்யத்தொடங்குதற்குக் காரணமாகிய நினது வலியுடனே புகழை வாழ்த்திக் காண்பேனாக வந்தேன் ; பெரும! திரண்ட முகிலெனக் கருதி மயங்கும் பலபடரிசைப் படையினையும், மலையென்றுகருதித் தேனினந்தங்கும் பெரிய பல யானையினையும், மாறுபடுவோர் அஞ்சும்படி பெருத்தலாற் கடலெனக்கருதி மேகம் நீர்முகக்கச் சேறக் கொள்ளும் படையினையும் அமையாது நஞ்சுகரக்கும் பலவினையுடையவாகிய பாம்பினது தலை நடுங்கும்பரிசு இடியென்றுகருத முழங்கும் முரசினையும், எல்லார்க்கும் எப்பொருளும் வரையாதுகொடுக்கும் வண்மையையுமுடைய குடநாட்டார்வேந்தே !—எ - று.

காவல! பொருந! டெரும! கோவே! ஏத்திக் காணகு

வசதேனெனக
கூட்டி வினைமுடிவுசெய்க.

குன்றெ ாறது, சிறுமலைகளை ; அன்றி, மண றகுனறென்று நெய்தனில மாக்கி ஏனை மூன்றோடும் கூட்டி, நானிலத்தோருமென்று உரைப்பாருமுளர்.

அடுபொருவென்றது, வேறதற்கு வெளிபபடையாயகின்றது.

தளர்ச்சி யென்பதன பின நீக்கவென ஒருசொல தநதது.

'அருமுனபிற்.. ...பிறிது செனறு' எனபதறகு முனபோலே

பிறிதாகப் பலருவப்பச சென்றெனினும் அமையும்; அனறி தளர்ச்சி பிறிதாகச் செனறெனறு உரைப்பாருமுளர்.

முன்பின தளர்ச்சி

(கஎ) ஆறுத முழங்கும் முரசென்க.

---



(ங.அ.) முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇப்
பரந்து பட்ட வியன்ஞாலம்
தாளிற் றந்து தம்புகழ் நிறீஇ
யொருதா மாகிய வுரவோ ரும்ப
ரு லொன்றுபத் தடுக்கிய கோடிகடை யிரீஇய
பெருமைத் தாகநின் னுயு டானே
நீர்த்தாழ்ந்த குறுங்காஞ்சிப்

பூக்கதூஉ மினவாளை
நுண்ஞாற் பருவராற்
[1] குருஉக்கெடிற்ற குண்டகழி
வானுட்கும் வடிநீண்மதின்
மல்லன்மூதூர் வயவேந்தே
செல்லு மூலகத்துச் செல்வம் வேண்டினு
ஞாலங் காவலர் தோள்வலி முருக்கி
யொருநீ யாகல் வேண்டினுஞ் சிறந்த
நல்லிசை நிறுத்தல் வேண்டினு மறறதன்
றகுதி கேளினி மிகுதி யாள
நீரின் றமையா யாக்கைக் கெல்லா
முண்டி கொடுத்தோ ருயிர்கொடுத் தோரே

---

க. 'முழககு' எனபது ஒலிததடமுருழ றபணபையுணாததுதறகு
ரன்; நன் - மயிலை. 4. சருஅ; நன் - வி. ரு. சருகூ.

மேற

ரு. "பலவெள்ள மீககூற,வுலக மாணட வுயர்நதோர் மருக"
(மதுரை.
- - ச); "அடையடுப் பறியா வருவி யாம்ப, லாயிர வெள்ள ஊழி,
த வாழிய பலவே" பதிற். சுரு: கக - உக.

வாழி

க௦. கெடிறு: "இலகெடிறு சொரிநத, வகன்பெரு வட்டி",
"காககை, நங்கழி யினககெடி ருருந துறைவா' ஐங்குறு. சஎ, கசுஎ.
கக. வடி - திருததம்; "வடிதேர்ததானை" மணி. கரு: சுஉ.

கச - ரு. "வார்சான்ற கூந்தல வ ம்புயர வைகலு, நீர்சான் றுயரவே ல்லுயருஞ் - சீர்சான்ற, தாவாக குடியயரத தாக்கருஞ்சீர்க கோவுயரு, ாவா தரைக்கு முலகு" சிறுபஞ்ச. சக.

கசு. புறநா. ௫௦: கச - ரு.

கஅ. "நீரின் றமையா துலகு" குறள். உ௦.

கஅ - க. "மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லா, முண்டி கொ டுேதா ருயிர்கொடுத் தோரே" மணி. கக: கரு - சு.

(பி - ம்.)—1 'குருஉக்கெடிற்றுக்குண்டகழி'

19-23. கல்லாடம், 12 - மேற். ப. 92



நிலத்தையும் ஒருவழிக்கூட்டினவர்கள் இவ்வுலகத்து உடம்பையும் உயிரை யும் படைத்தவராவர்; நெலமுதலாயவற்றை வித்தி மழையைப்பார்த்திருக் கும் புலவிய நிலம் இடமகன்ற நிலத்தையுடைத்தாயினும் அது பொருநதி யாளும் அரசனது முயறசிககுப் பயனபடாது; ஆதலால, கொலலும்போரை. யுடைய செழிய! இதனைக கடைபபிடிதது விரைநது நிலங்குழிநதவிடததே நீர்நிலைமிகும்பரிசு தளைத்தோா, தாஞசெலலுமுலகததுச செலவமுதலாகிய மூன்றினையும் இவவுலகததுத தம்பேரோடுதளைத்தோராவா; அநநீரைத்தளை யாதவர், இவ்வுலகததுத தம்பெயரைத் தளையாதோர்.—எ - று.

இதனால, நீயும் நீர்நிலைபெருகத தட்கவேணடுமெனபது கருததாகக கொள்க.

மற்றும், அம்மவும : அசைநிலை.

உணவி எபிண்டம உணடிமுதற்றுதலான, உணடிகொடுததோர் உயிா கொடுத்தோரென யாறிககூடடுக.

தளளாதோர் இவட்டபா ரர்த்தா ராதலால, செழிய ! இதனை இகழாது வலலேசெய்யென ஒருசொ வருவிததுரைபபாருமு ளர். தட்டோரெ எபதற

குத் தம்பெயரைத தளைதமதாரெனினும் அமையும.

கூற்றுக் கண்ணோடிய வெருவரு பறந்தலை
யெழுவர் நல்வலங் கடந்தோய்நின்
கழூஉவிளங் காரங் கவைஇய மார்பே.

திணை - வாகை; துறை - அரசவாகை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—ஒலிக்குங் கடலாற் சூழப்பட்ட அணுசசெறிந்த அகன்ற உலகத்துக்கண் தமிழப்படை கைகலந்த தலையாலங்கானத்துக்கண் நிலைபெற்ற உயிரது பன்மையையும் அவ்வுயிரைக்கொள்ளுங் கூற்றினது ஒருமையையும் நின்னுடனே சீர்தூக்கிக்காட்டிய வென்றிவேலையுடைய செழிய! பெரும்புலியைப்படுக்கும் வேட்டுவன் எந்திரமறிந்து கொளுத்திய பெரிய கல்லையுடைய அடாரையும்போலுமென்று விரும்பிப் புலவினோனல்லனோ யான? கலங்கி மலைக்கணணே தங்கிய குருவியினம் போல அமபுசென்று தைக்கத பொருத

கரு - சு. புறநா. உஎஅ; மறக்குடிமகளிர், தமமுடைய தந்தை முதலியவர்கள் போர்க்களத்தில இறந்ததுகண்டு இன்புறதல, "களனின்று னெந்தை கணவன் களப்பட்டான், முன்னின்று மொய்யவிந்தா ரென்னையர்- பின்னின்று, கைபோயக கணையுதைப்பக் காவலன் மேலோடி, யெய்போர்த் திடந்தானென் னேறு" (பு - வெ. அ: உஉ) என்பதனாலுமறியப்படும்.

கச - சு. "இன்னவிறலும்......பறந்தலை என்புழி மூதிறபெண்டிர் இழவுபற்றி அழுதாராயிற கூறறுக்கண்ணோடாதாகலின் அவர் உவந்தனரென பது பெற்றும்; அதனனே அஃது

தோல். மெய். ௭. ௫ - பேர்.

உவகைககலுழசசியாமெனபது "

கஎ. புறநா. எசு : கஉ-௩; "கொயசுவற புரவிக கொடித்தேர்ச

செ ழிய, ஞலங் கானத தகஎ றலெ சிவபபச, சேரல செம்பியன் சினஙகெழு திதி யன,போர்வல வியானைப் பொலம்பூ ணெழினி,நாரி நறவி னொருமை யூரன, றேஎகம ழகலததுப் புலாஅத சாஅஇ,னிருஙகோ வேணமா னியறோப பொரு
நரொடு,றெழுவா நலவல மடஙக வொருபகல,முரைசொடு வெணகுடை யகப் படுத துரைசெலக,கொளறு","காலிய னெடுநதோக் கைவண செழிய,ஞலங கானத் தமாகடந துயாத்த,வேலினும் பலரூழ மின்னி","தெனனர் கோமா,
னெழுவுறழ் திணிதோ ளியறோச செழிய, மோரா வெழுவ ரடிப்படககடநத, வாலங் கானத தார்ப்பினும் பெரிது"(அகநா. நகூ,கஎரு, உ0க); "இருபெரு வேநதரொடு வேளிர சாயப, பொருதவரைச செருவெனறு", "ஆலஙகானத் தஞ்சுவரவிறுத, தரசுபட வமருழககி, முரசுகொணடு களம்வேட்ட, திறலுயர் புகழவேநதே" மதுரை. ருரு - சு ; கஉஎ - ந0.

வடு

கஎ - அ. "பொனமா மௌலி புனைநத பொய்யிலான றனமா னைக கழ றுழும்வேலையி, னனமாற பிறழு வுறற நாயகன, சொன்னான" கம்ப. கிட்கிநதா. அரசியல. உசு.

எ - கஅ. செய்யுட்கண் 'கழுஉவிளங்காரங்கவைஇயமார்பே' என இறுதிக்கண் இரணடாவது தொகைத 'முயங்கினேனவலனே' எனவரும் முடிககுஞ் சொலலோடு ஒட்டி ஒருசொலலாகாதென்பதற்கு மேற்கோள ; தோல். எச்ச. சூ. கசு - ந.



தற்கரிய புண்ணையுடைய யானையினது துளையையுடைய பெருங்கை டனே துணிந்துவீழ்நத கலப்டையையொப்ப நிலத்தின்மேலே புரள வாயு

வெட்
டிப்போர்க்களத்தின்கணணேவீழத்த ஏநதிய
வாள்வெற்றியையுடையோராய்
எநதலைவனெடுகெட்டநதார், எம்முடைய புலியதலையையுடையமைநதர் ; இப்
பெற்றிப்பட்டவென்றியும் உளவோ நமககென்றுசொலலி முதிய மறக்குடி
யிற்பிறநத பெண்டிர் இன்புறறு உவகையால அழ, அதுகணடு நாணிக

கூற்றம் இரஙகிய அஞசத்தக்க போர்ககளததி கணணே இருபெருவேந
தரும் ஐம்பெருவேளிருமாகிய எழுவரது நலவலியை வென்றோய் ! நினது
கழுவிவிளக்கின முத்தாரம் அகததிட்ட மார்பை.—எ - று.

தமிழ்தலைமயங்கியவென்புழி, தலை, அசைநிலை ; இடமுமாம்.

செழிய ! கடநதோய ! நின்மார்பை யான் விரும்பி
முயங்கினேனல்லனோவெனக்கூட்டுக.

பெருங்கலலடாருமென்ற உம்மை, எமககு விருப்ப
ஞசெய்தலேயன்றி நின்பகைவர்ககுவருத்தஞ்செய்தலான், நின்மாரபு
கலலடாரும்போலுமென எச்சவும்மையாயிற்று ; சிறப்பும்மையுமாம்.

மூதிற்பெணடிா கசிதலால நாணிப்பொசவு அழுதலாற
கணணோடிய வெனவும் நிரனிறையாகக்கொ ாக.

போர்முடிதவிற போயிலை கூறறை நாணியும் கணணோடியும்
போ யிற்றுப்போலக் கூறியது, * ஒரணி கருதிபென றது.

இனி, தம்புதைதத யானையை வெட்டிபபடுததன
மறததிற்கிழி பென்று பெணடிா இரஙகியழுதலின், கூற்றக கணடு
தென்று உரைப்பாருமுளர்.

நாணிககணணோடிய
(கக)

* ஒரணியென்றது தறகுறிப்பேறறதலை.

(௨௦.) இருமுந்நீர்க் குட்டமும்
வியன்ஞாலத் தகலமும்
வளிவழங்கு திசையும்
வறிதுநிலைஇய காயமும், என்றாங்
கவையளந் தறியினு மளத்தற கரியை
யறிவு மீரமும் பெருங்க ணோட்டமுஞ்
சோறுபடுக்குந் தீயோடு
செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது
பிறிதுதெற லறியார்நின் னிழல்வாழ் வோரே

---

க. புறநா. உ௬: க: "கடற்குட்டம் போழ்வர் கலவர்" நான்மணி. கஅ.

க - ௫. புறநா. ௩௦: க - ௬ ; "நிலநீர் வளிவிசும் பென்ற னளப்பரி யையே" பதிற். கச.

கான்இ,



திருவி லல்லது கொலைவில் லறியார்
நாஞ்சி லல்லது படையு மறியார்
திறனறி வயவரொடு தெவ்வர் தேயவப்
பிறர்மண் ணுண்ணுஞ் செம்மனின் னாட்டு
வயவுறு மகளிர் வேட்டுணி னல்லது
பகைவ ருண்ணா வருமண் ணினையே

பொழுதன்றிக் கூகை குழறலும் போலவ புள்ளிகடடோளறிய நிமித்தம்" தொல். புறத்திணை. ரு. ௯௬ - ந.

௧௯. 'விதிர்ப்பு' நடுக்கமாகிய குறிப்புணர்த்துமென்பதற்கு மேற் கோள்; தொல். உரி. சூ. ௨௦ - சே ;
வேடி ம்ந ரு. ௧அ - ந ; இ - வி. சூ. ௨அ௧ - உரை.

௨௦. புறநா. ச : ௧௭.

~~(பி - ம்.) — 1 'விதிர்ப்பு'~~

# புறநானூறு மூலமும் உரையும்.

௪௯

*மன்னுயி ரெல்லா நின்னஞ் சும்மே.*

'திணையும் துறையும் அவை.

சோமான் யானைக்கட்சேய்
குறுங்கோழியூர்கிழார் பாடியது.

மாந்தரஞ்சேரலிரும்பொறையைக்

இ - ள்:—பெரிய கடலினது ஆழமும், அகன்ற உலகத்துப் பரப்பும், காற்றியங்குந திசையும், வடிவின்றி நிலைபெற்ற ஆகாயமும் என்றுசொல்லப் படுமவற்றை வரையறுத்தறியினும் வரையறுத்தற்கரியை, அறிவும் அன்பும் மிக்க கண்ணோட்டமும் ; ஆகலால், சோற்றை ஆக்கும் நெருப்புடனே செஞ் ஞாயிற்றினது வெம்மையல்லது வேற வெம்மையறியார், நின்குடைநிழற் கண்வாழ்வோர் ; இந்திரவில்லல்லது பகைவரது கொலைவில்லையறியார் ; கலப்பையலலது வேறு படைக்கலமுமறியார்; போர்செய்யும் கூறுபாட்டை யறியும் வீரருடனே பகைவர் மாய அம்மாற்றருடைய † மண்ணைக் கொண்டுண்ணுந தலைவ ! நின்னுடைய நாட்டின்கண் வேட்கைநோயுற்ற பெண்டிர்

விரும்பி உலையணிய பலத்து பகைவருணரப் படாத பெறுதற்கரிய மண்ணை யுடையை; அம்புதங்குங் காவலையுடைய அரணுடனே அறந்தங்கும் செவ்விய கோலையுடையை; புதப்புள் வரினும் பழையபுள் அவ்விடத்தைவிட்டுப் போகினும் அவற்றால் நடுக்கமுறுதலறியாத சேமமாகிய காவலையுடையை; அத்தன்மையையுடையையாதலான், உலகத்து நிலைபெற்ற உயிரெல்லாம், தத்தங்காதலர் மிக்கு ஏதம்வருங்கொல் என்று அஞ்சும்.—எ - று.

அறிவும் ஈரமும் கண்ணோட்டமுமென்பன வினைவிசேடமாய் நிற்றற்கு உரியவாயினும் முதல்வினை கொண்டன.

அளந்
(உ0)

---

உக. ஈவக. கூருஎ. ந - மேற.

கஅ - உக. புடபற்றி வநததற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. ரு. ஙO - இளம்.

* ம. "குடியோம்புதல வருமாறு:—'இருமுகநீர்......அஞ்சும்மே' எனவரும்" (தொல். புறத்திணை. ரு. கஎ - இளம்); புறநிமித்தத்தால பாடாணுடையவற்குத் தோன்றிய தீங்குகண்டு அஞ்சி ஓம்படைகூறியதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. ரு. ஙஅ - ந.

† இப்பொருள்பற்றியே வடமொழியிலும் 'பூபுக' என்று அரசனைக் கூறுவர்.

---

(உக.) புலவரை யிறந்த புகழ்சா லோன்ற
ணிலவரை யிறந்த குண்டுகண் ணகழி
வான்றோய் வன்ன புரிசை விசும்பின்

---

க. புலவரை - அறிவின் எல்லை; "புலவரை யிறந்தோய் போகுதல் பொறேஎன்" (சிலப். உஅ: கஎச); "புலவரை யிறந்த புகாரெனும் பூங்கொடி" மணி. ரு: கOக.

உ. "மண்ணுற வாழ்ந்த மணிநீர்க் கிடக்கின்" மதுரை. கூடுக.
7



மீன்பூத் தன்ன வுருவ ஞாயிற்
கதிர்நுழை கல்லா மரம்பயில் கடிமிளை
யருங்குறும் புடுத்த கானப்பே ரெயில்
கருங்கைக் கொல்லன் செந்தீ மாட்டிய
விரும்பு ணீரினு மீட்டற் கரிதென
வேங்கை மார்ப னிரங்க வைகலு
மாடுகொளக் குழைந்த தும்பைப் புலவர்
பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே
யிகழுந ரிசையொடு மாயப்
புகழொடு விளங்கிப் பூக்கநின் வேலே.

திணையும் துறையும் அவை.

* கானப்பேரெயில்கடந்த உக்கிரப்பெருவழுதியை ஐயூர்கிழார் பாடியது.

இ-ள்.—நினைப்பாரது அறிவெல்லையைக் கடந்த புகழமைந்த தலைவ! நிலவெல்லையைக் கடந்து பாதலத்தேயுற ஆழ்ந்த இடத்தையுடைய அகழியினையும் உயர்ச்சியான் வானைப்பொருந்துவதுபோன்ற மதிலையும் அவ்வானிடத்து மீன்பூத்தாற்போன்ற வடிவினையுடைய ஞாயிலினையும் வெயிற் கதிர் நுழையாத மரஞ்செறிந்த காவற்காட்டினையுமுடைத்தாய் அணுகுதற்கரிய சிற்றரண்களாற் சூழப்பட்ட கானப்பேரெயிலாகிய அரண், வலிய கையையுடைய கொல்லனாற் செந்தீயிற் கனனே

பொலிவதாக.

கானப்பேரெயில் மீட்டற்கரிதென வேங்கைமார்பனிரங்கப் பாடுதுறை முற்றிய கொற்றவேந்தே! நின்வேல பூக்கவென்க்கூட்டி வினைமுடிவுசெய்க.

குழைத்தவென்பது, குழைந்தவென மெலிந்துநின்றது. (உக)

---

(உஉ.) தூங்குகையா னோங்குநடைய
வுறழ்மணியா னுயர்மருப்பின
பிறைநுதலாற் செறனோக்கின
பாவடியாற் பணையெருத்தின
தேன்சிதைந்த வரைபோல
மிஞிறார்க்குங் கமழ்கடாத
தயறுசோரு மிருஞ்சென்னிய
மைந்துமலிந்த மழகளிறு
கந்துசேர்பு நிலைஇவழங்கப்
பாஅணின்று கதிர்சோரும்
வானுறையும் மதிபோலு
மாலைவெண் குடைநிழலான்

---

க. மூன்றும் வேற்றுமைவிரிமயக்கூறும் 'உத்திரதில'
ஒன்னபிறவும்' என்பதற்கு மேற்கோள்; தொல். வேற்றுமை. (ந. கஐ - சே.

உ. ஆன் ஒடுவாதற்கு மேற்கோள்; தொல். வேற்றுமை. ந. கஐ - ந.

க - உ.

வாயிலை" (இ

"தூங்கு...மருப்பின எனப எபோலவனவெல்லாம் ஆள் ஒடு
- வி. ரு. உ00 - உரை); "தூங்குகையா லோங்குநடைய,

வுறழ்மணியா லுயர்மருப்பின...இவை உடனிகழ்சசி;
வாறே ஒட்டிககோ ாக" நன்-மயிலே. ,, உகூ;

ஆ ''உருபோடும் இவ்
நன் - வி. ரு. உகூ.

சு. யானைமதம் மணமுடையதென்பதையும் அதில வண்டுமொய்க்கு மென்பதையும், "வரிவண் டார்கரும் வாயபுகு கடாஅம்" ([redacted]); "பூ நாறு கடாஞ் செருக்கி" (மணி.கக: உஉ); "புணர்மருப் பியானையின் புயல்கொண் மும்மத, மணமகள கதுபபெய நாறும்" (சீவக. ககஉக); "பாத்த யானையிற் பதங்களிற் படுமத நாறுக, காத்த வங்குச நிமிர்நதிடக் காலபிடித் தோடிப,பூத்த வேழிலைப் பாலையைப் போடிப்பொடி யாகக,காதகி ரங்களிற் றலைத்தொடுந்தேய்த்ததோர் களிறு"(கம்ப.வரை. சு); "விழிமலர்ப்பூ சனை புகுற்றித் திருநெடுமால் பெறமாழி பீளவாங்கி, வழியொழுகாச் சலநதரன் மெய்க் குருதிபடி முடைநாற்ற மாறு மாற்றுநர், பொழிமதநீர் விரையேற்றி" (காஞ்சிப். கடவுள். ரு) என்பவற்றாலறிக.

சுக. "கமழ்கடாஅத், தளறுபட்ட நறுஞ்சென்னிய, வரைமருளு முயர்தோனறல". மதுரை. சச - சு



வாண்மருங்கிலோர் காப்புறங்க
வலங்குசெங்நெற் கதிர்வேய்ந்த
வாய்கரும்பின் கொடிக்கூரை
சாறுகொண்ட களம்போல

வேறுவேறு பொலிவுதோன்றக்
குற்ருணு வுலக்கையாற்
கலிச்சும்மை யியலாங்கட்
பொலந்தோட்டுப் பைந்தும்பை
மிசையலங் குளைய பனைப்போழ் செரீஇச்
சினமாந்தர் வெறிக்குரவை
யோத நீரிற் பெயர்பு பொங்க
வாய்காவாது பரந்து பட்ட
வியன்பாசறைக் காப்பாள
வேந்துதந்த பணிதிறையாற்
சேர்ந்தவர் [1] கடும்பார்த்து
மோங்குகொல்லியோ ரடுபொருந
வேழ நோக்கின் விறல்வெஞ் சேஎய்
வாழிய பெருமநின் வரம்பில் படைப்பே

கரு. "கொடி - ஒழுங்கு; 'கொடிக்கூரை' என்றார்" சீவக. கடஎகூ.

கசு. "சாறயர் களத்து வீறுபெறத் தோன்றி" பொருந. உ.

உ௦. புறநா. கூ௪: கரு; "செய்பொன்வாகை" மணி. உசு: கூ௦.

உ௦ - உக. அரசர் தமக்குரிய அடையாளப்பூவொடு புறத்திணைப் பூக்களையும் விரவித் தொடுப்பித்துத் தாம் முடிக்கொளுதலும், வீரர்க்குச் சூட்டுதலும்மரபு :—புறநா. எஎ : உ - ங; க௦௦ : ரு - சு; "குடைநிலை வஞ்சியும்.........வட்கார் போகிய வாளமர் தோட்டொடு, புடைகெச சேனை பொலியச் சூட்டி" (சிலப்.உரு: கசுக - எ); "இளவரிக லைட்டிலை யாரொ டேர்பெறத், துளவிய தும்பையுஞ் சுழியச முடிகுவன்" கம்ப. முதற்போர். ககரு.

மெல்லிய கரும்பாற்கட்டப்பட்ட ஒழுங்குபட்ட கூரை, விழாவெடுத்துக் கொள்ளப்பட்ட இடம்போல வேறுவேறாகப் பொலிவுதோன்றக் குற்று அமையாத உலக்கையொலியுடனே மிக்க ஆரவாரத்தையுடைய அகன்ற விடத்துப் பொன்னாற் செய்யப்பட்ட இதழையுடைய பசிய தும்பையுடனே மிசையே அசைந்த தலையினையுடைய பனந்தோட்டைச் செருகிச் சினத்தையுடைய வீரர் வெறியாடும் குரவைக் கூத்தொலி ஓதத்தையுடைய கடலொலி போலக் கிளர்ந்து பொங்கப் * படைப்பெருமையாற் பகைவருட்கும் மதிப்புடைமையின் இடங்காவாது பரந்துகிடக்கின்ற அகன்ற பாசறையிடத்துக் காவலாள! மாற்றரசர் பணிந்து தந்த திறையால் தம்மை அடைந்தவருடைய சுற்றத்தை நிறைக்கும் உயர்ந்த கொல்லிமலையோருடைய அடுபொருந! யானையினது நோக்குப்போலும் நோக்கினையுடைய வெற்றியை விரும்பும் சேயே! வாழ்க, பெருமானே! நினது எல்லையில்லாத செல்வம்; நின்னைப் பாடிய விளங்கிய செவ்விய நாப் பின்னைப் பிறருடைய புகழைச் சொல்லாமற் பாதுகாவாது கொடுக்கும் வலியையுடைய எங்கோவே!

மாந்தரஞ்சேர லிரும்பொறை பாதுகாத்த நாடு தேவருலகத்தையொக்குமென்று பிறர் சொல்லக் கேட்டுவந்து கட்கினிதாகக் கண்டேன்; பெருமானே! முயற்சி வெறுப்பில்லையாய் வேற்றுநாட்டின்கட் சென்று விடும் படையுடனே சோறுண்டாக நடப்பை; நீ மடியாயாதலான்.—எ-று.

கதிர்சோருமதியெனவியையும்; கதிர்சோருமென்னும் சினைவினை மதி யென்னும்முதலொடுமுடிந்தது;
கதிர்சோருமாலையென இயைப்பினுமமையும்.

பாய்கின்றென்று பாடமோதுவாருமுளர்.

கூரைபொலிவுதோன்றவென இடத்துநிகழ்பொருளின்றொழில இடத்து மேல ஏறிநின்றது.

செரீஇயென்னும் வினையெச்சத்தை ஆடுமென ஒருசொலவருவித்து அதனோடுமுடிக்க.

நிலைஇ வழங்கக் காப்புறங்கப் பொலிவுதோன்றப்

பெயர்புபொக்க

வென்னும் செயவெனெச்சங்களும், வாயகாவாதென்னும்
எதிர்மறைவினை

யெச்சமும் பரநதுபடடவென்னும் பெயரெச்சவினைபொடு முடிநதன.

காப்பாள! பொருந! சேஎய்! பெரும! எங்கோ!
பெரும! நீ துஞசாயாத

லாற் சோறுபடநடத்தி; அதனால இரும்பொறை ஓம்பியநாடு புத்தேளுலகத்
தற்றெனக் கேட்டுவநது இனிதுகண்டிசி.ா ; நின்படைப்பு வாழியவெனக்
கூட்டி வினைமுடிவுசெய்க; அன்றி, எங்கோவே! நீ துஞசாதபடியாலே,
இரும்பொறையோம்பிய நாடு பததேளுலகத்தற்றெனப பிறர்சொலலக்
கேட்டு நிற்பாடிய அலங்குசெந்நாப பிறரிசை நுவலாதபடி வநது இனிது
கண்டேன் ; நினது படைபபொடு வாழவாயாகவென இயைப்பினுமமையும்.

இசின், தன்மைக்கண் வநதது.

சோறுபடநடத்தியெனபதனை வினையெச்சமாகவுரைப்பினுமமைட்ம்.

உயர்மருப்பினெனபதூஉம், செநநுக்கினென்பதூஉம்,
பணையெருத்தி

னென்பதூஉம் பாடம்.
(உஉ)

---

* "தானை, படைததகையாற் பாடு பெறும்" குறள். எசுஅ.



(உங.) வெளிறி னோன்காழ்ப் பணையிலை முனைஇக்
களிறுபடிந் துண்டெனக் கலங்கிய துறையுங்
கார்நறுங் கடம்பின் பாசிலைத் தெரியற்

சூர்நவை முருகன் சுற்றத் தன்னநின்
கூர்நல் லம்பிற் கொடுவிற் கூளியர்
கொள்வது கொண்டு கொள்ளா மிச்சில்
கொள்பத மொழிய வீசிய புலனும்
வடிநவில் நவியம் பாய்தலி னூர்தொறுங்
கடிமரந் துளங்கிய காவு நெடுநகர்
வினைபுனை நல்லில வெவ்வெரி நினைப்பக்
கனையெரி யுரறிய மருங்கு நோக்கி
நண்ணார் நாண நாடொறுந் தலைச்சென்
றின்னா மின்னபல செய்குவன் யாவருந்
துன்னல் போகிய துணிவி னோனென
ஞால நெளிய வீண்டிய வியன்படை

க. வெளிறு-வயிரமின்மை: "இருமபனை வெளிறநின புனசா யன்ன" முருகு. ருகஉ.

க - உ. புறநா. கரு : சு ஆம் அடி முதலியவற்றைப் பார்க்க. ரு.

மராஅத,

புறநா. ௩௩. : கஉ-௩ ; "மறுவில கறபின் வாணுதல கணவன்... தருளபூந தாரடார் புரளு மாபிளை", "செஙகால மராஅதத வாலிண ரிடையிடுபு சுரும்புண்த தொடுதத பெருந்தண மாத்தழை" (முருகு. சு - கக ; உ0உ - ௩); "காரலர் கடம்பான" (மணி. ௪ : ௪க); "கார்க்கடப பந்தாரெஙகடவுள" சிலப். உ௪. "கேரிஙழ"

ரு. கூளியர் - ஏவல செய்வோரென்பதற்கு இவ்வடி மேற்கோள் ; (முருகு. உஅஉ - ந) ; "கொடுவிற கூரியா கூவை காணிய" மலைபடு. ௪உஉ.

அ-கூ. பகைவருடைய காவன்மரத்தை அரசர் வெட்டுவிப்பர்; (புறநா. ரு௬ : ௬ - ௯ ; ருஎ : ௧௦); "கடிகாவி னிலைதொலைச்சி" (மதுரை. ௧ரு௩); "பழையன் காக்குங் கருஞ்சினை வேம்பின், முரரை முழுமுத றுமியப் பண ணி" (பதிற். ரு-ஆம பத்து, பதி); "பழையன் காக்குங் குழைபயி லொடுங் கோட்டு,வேம்புமுத றடிந்த வேந்துவாள் வலத்துப,போந்தைக் கண்ணிப் பொறைய" சிலப். உஎ: ௧உச - ௬.

10- ௧௧. "கனையெரி பொத்தி" மணி. உ: ௬உ.

௧ரு. "கார்வினை மேக மன்ன கவுளழி கடாத்த வேழம், போர்வினை யிவுளித் திணடேர்புனைமயிர்ப் புரவி காலாள்,வார்வினை முரசம் விம்ம வானு லாப் போந்த் தேபோ, னீர்வினை சுரிசங் காப்ப நிலகெளி பாந்த வனதே" ௫௬ சீவக. ௪௩௩.



யாலங் கானத் தமர்கடந் தட்ட
கால முன்பநிற் கண்டனென் வருவ
லறுமருப் பெழிற்கலை புலிப்பாற் பட்டெனச்
சிறுமறி தழீஇய தெறிநடை மடப்பிணை
பூளை நீடிய வெருவரு பறந்தலை
வேளை வெண்பூக் கறிக்கு
மாளி லத்த மாகிய காடே.

திணையும் துறையும் அவை; துறை-நல்லிசைவஞ்சியுமாம்.

பாண்டியன் தலையாலங்கானத்துச்சேநவென்ற நெடுஞ்செழியனைக் கல்லாடனார் பாடியது.

இ - ள்.—வெண்மையில வாத வலிய வயிரக்கம்பத்தையுடைய கூடத்தில் நிற்றலை வெறுத்துச்சென்று யானைபடிந்து நீருண்டதாகக்

கஎ. புறநா. கக: ௩; "மீளி மொய்ம்பின மிகுவலி செருக்கி" (பொருந. கசo); "ஆற்றல, காலனே டொக்கும்" (பெருங். க. ௩௯: க00 - கoக); "எண்மரின் வலியனைய யமன" கம்ப. மிதிலே. கoஎ.

* "நலவிற் சிதைத்ததீ நாடொறு நாடிததம், மிலலத்தி லாக்குத லால்" நாலடி. உஉ௫.

புறநானூறு மூலமும் உரையும்.

௫௭

இவனைக்காணு முன்னே கண்டுவந்தேனென்றான்,

இவன்செய்தவென் றியெல்லாம் கண்டமையின்.

பாசிலைத்தெரியன் முருகனென இயையும்.

கவியம்பாய்தலென்பது, கருவி கருத்தாவாய் நின்றது.

கலை புலிப்பாற்பட்டெனச் சிறுமறிதழீஇய மடப்பிணை பறந்தலை வேளை வெண்பூக்கறிக்குமென்பது, அவன் பகைவரைக்கொன்றவழி அவர் பெண்டிர் தம் இளம்புதல்வரை ஓம்புதற்பொருட்டு இறந்துபடாது உயிர்வாழ்கின்றாரென்பதோர் பொருள்தோன்ற நின்றது.

அட குதின்று

இனித் துணிவிலேனென்று பிறர்சொல்லவெனவும், கண்டனென் வருவலென்பதனைக் காலமயக்கமாக்கிக் கலங்கியதுறைமுதலாயினவர்றை நோக்கி

இன்னும் இவ்வாறு பகைவர்நாட்டின்கண்
நடத்தே நின்னைக்காணியவந்தேனெனவும்

மேற்செலவனென நினைந்து காட்
உரைப்பாருமுளர். (உரு)

---

(உச.) நெல்லரியு மிருந்தொழுவர்
செஞ்ஞாயிற்று வெயின்முனையிற்
றெண்கடற்றிரை மிசைப்பாயுந், ௭
திண்டிமில் வன்பரதவர்
௫ வெப்புடைய மட்டுண்டு
தண்குரவைச் சீர்தூங்குந்து
[1] தூவற் கலித்த தேம்பாய் புன்னை

---

௧. புறநா. ௨0௯: ௨; தொழுவர் - தொழிலசெய்வார்; மதுரை. அ௯.

௩. உம்மீறு உகரமாய்த்திரிந்ததென்பதற்கு, 'பாயுந்து' என்பது மேற்கோள்; இ - வி. சூ. ௨௫௪ - உரை.

௧ - ௩. "நெல்லரியும்......பாயுந்து; இதிற் 'பாயும்' என்றபாலது 'பாயுந்து' என வந்தது" ; (தொல். இடை. சூ. ௭ - பேர்) ; உம் உ தாயிற்றென்பதற்கு மேற்கோள் ; நன் - வி. சூ. ௩௪௧.

௧-௭. உம்மீறு உந்தென்றாயதற்கு மேற்கோள்; நன்-மயிலை.சூ. ௩௪0.

௫. புறநா. ௨௯: ௧௫.

௩ - ௬. 'பாயுந்து', 'தூங்குந்து' என வருவன பெயரெச்சவினைத்

திரிசொல் என்பர் ; தோல். எச்ச. சூ. கக - ந.

எ. "புன்னை, யுடை திரைத் திவலை யரும்புந் தீநீர்" (குறுந். ரு:உ-௩); 'கலித்தல்' தழைப்பென்னும் பொருளில வந்ததற்கு மேற்கோள்; தோல். உரி. சூ. கூ௩-பேர்.

(பி - ம்.)—1 'திவலையிற்கலித்த'

8

மெல்லிணர்க் கண்ணி மிலைந்த மைந்த
ரெல்வளை மகளிர் தலைக்கை [1] தரூஉந்து
வண்டுபட மலர்ந்த தண்ணறுங் கானன்
முண்டகக் கோதை யொண்டொடி மகளி
ரிரும்பனை யின் குரும்பைநீரும்
பூங்கரும்பின் றீஞ்சாறு
மோங்குமணற் குவவுத்தாழைத்
தீநீரோ டுடன்விரா அய்
முந்நீ ருண்டு முந்நீர்ப் [2] பாயுந்
தாங்கா வுறையு ணல்லூர் கெழீஇய
வோம்பா வீகை மாவே ளெவ்வி
புனலம் புதவின் மிழலையொடு கழனிக்
கயலார் நாரை [3] போர்விற் சேக்கும்
பொன்னணி யானைத் தொன்முதிர் வேளிர்

---

௧. "எல்லென்பது உரிச்சொனீர்மைத்தாயினும், ஆசிரியர்

இடைச் சொல்லாக ஓதினமையான் இடைச்சொல்லென்று கோடும்; 'எல்வளை' என எல்லென்பது இலங்குதற்கண் வந்தவாறு" தொல். இடை. சூ. உக - சே.

அ - க. "மருங்கிற் கட்டிய நிலனேர்பு துகிலினன், முழவுறழ் தடக் கையி னியல வேந்தி, மென்றோட் பல்பிணை தழீஇத் தலைத்தந்து" முருகு. உகச - சு.

கக. "மணிப்பூ முண்டகத்து மணன்மலி கானற், பரதவர் குரவையொ டொலிப்ப" மதுரை. கக - எ.

மகளிர்

க - களை. "செல்லரியும்......செழீஇய என்றவழி உம் உந்தாயிற்று" (தொல். இடை. சூ. சரு - பேர்); பெயரெச்சவினையடுக்கிவந்து ஒரு பெயர் கொண்டதற்கு மேற்கோள்; நன் - மயிலை. சூ. கடுச.

க - கக. " செல்லரியுமிருக்தொழுவர் என்னும் புறத்தொகைப் பாட்டினுள் 'தெண்கடற்றிரை மிசைப்பாயுந்து' எனவும், 'தண குரவைச் சீர்தூங்குந்து' எனவும், 'எல்வளை மகளிர் தலைக்கை தருஉந்து' எனவும், 'மூக்நீர்ப்பாயும்' எனவும் செய்யுமென்னும் பெயரெச்சமடுக்கி, 'ஓம்பா வீகை மாவே ளெவ்வி, புனலம் புதவின் மிழலை' என்னும் ஒருபொருள்கொண்டு
முடிந்தவாறு கண்டுகொள்க
இய' என்னும் பெயரெச்சம்

; ஆக்குத் 'தாங்கா வினையு ணல்லூர் செழீ
இடைநிலையாய் வந்தது" தொல். வினை. சூ.
கசு - சே; ந; இ - வி. சூ. கஉஅ - உரை.

௨௦. ழ. ஐங்குறு. கூ: ௪.

௨௧. தொன்முதிர்வேளிர் - அகத்தியமுனிவராற் கொண்டுவரப்பட்ட பழமை முதிர்ந்தவேளிர்; இது, "துவராபதிப்போந்த நிலங்கடந்தநெடுமுடி

(பி - ம்.)—1 'தழுவந்து' 2 'பாயுந்து' 3 'போரிற்'

# புறநானூறு மூலமும் உரையும்.

குறி

குப்பை நெல்லின் முத்தூறு தந்த
கொற்ற நீள்குடைக் கொடித்தேர்ச் செழிய
நின்று நிலைஇயர்நின் னாண்மீ னில்லாது
௨௫ படாஅச் செலியர்நின் பகைவர் மீனே
நின்னொடு, தொன்று மூத்த வுயிரினு முயிரொடு
நின்று மூத்த யாக்கை யன்னநின்
னாடுகுடி மூத்த விழுத்திணைச் சிறந்த
வாளின் வாழ்நர் தாள்வலம் வாழ்த்த
௩௦ விரவன் மாக்க ளீகை நுவல
வொண்டொடி மகளிர் பொலங்கலத் தேந்திய
தண்கமழ் தேறன் மடுப்ப மகிழ்சிறந்
தாங்கினி தொழுகுமதி பெரும வாங்கது
வல்லுநர் வாழ்ந்தோ ரென்ப தொல்லிசை
௩௫ மலர்தலை யுலகத்துத் தோன்றிப்
பலர்செலச் செல்லாது நின்றுவிளிந் தோரே.

யண்ணல்வழிக்கண் அரசாபதினெணமரையும், பதினெணகுடி வேளிருள் ளிட்டாரையும்.........கொண்டுபோந்து", "மலயமாதவன் நிலங்கடந்த நெடி முடியண்ணலுழை நரபதியருடன்
கொணர்ந்த பதினெண்வகைக்குடிப்பிறந்த வேளிர்" (தொல். பாயிரம், ந; ஷை அகத். சூ. ௩௨ - ந) எனப்போந்துள்ள வாக்கியங்களால் விளங்குகின் றது.

௨௨. 'தரல்' படர்க்கைக்கண்வந்ததற்கு மேற்கோள்; நன் - மயிலை. . சூ. ௩௮௦.

௨௪ - ரு. புறநா. ௨? ௬ : ௧௦ - ௧௨.

௨௬. "அஞ்சினர்க் களித்தலும் வெஞ்சின மின்மையு, மாரணி புகு தலு மழிபடை தாங்கலும், வாண்மீக் கூற்றத்து வயவ ரேத்த" (சிறுபாண். ௨௧௦ - ௧௨); "ஒன்னு ரோட்டிய செருப்புகன் மறவர், வாள்வலம் புணர்ந்த நின்றாள்வலம் வாழ்த்த" மதுரை. ௭௨௬ - ௭.

௩௦. 'வரையாது கொடுத்தலும், பரிசில் வாழ்க்கைப் பரிசில ரேத்த" சிறுபாண். ௨௧௭ - ௮.

௩௧ - ௩. புறநா. ருகூ : ௧௮ - ௨௰; ௩௬௭: ௬ - ௭; 'மகிழ்..... ... மகளிர், போக்கில பொலங்கல நிறையப் பல்கால், வாக்குபு தரத்தர" (பொருந. ௮௪-௬); "இலங்கிழை மகளிர் பொலங்கலத் தேந்திய, மணங்கமழ் தேறன் மடுப்ப நாளு, மகிழ்ந்தினி துறைமதி பெரும" (மதுரை. . ௭௭௯- ௮௧); "பூங்குழை மகளிர் பொலங்கலத்தேந்திய, தேக்கமழ் தேறலொடு தெளிமது மடுப்பினும்" பெருங். ௨. ௧௪ : ௯௦ - ௯௧.

௩௪ - ௮. "மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கண் மாயா, தேந்திய கைகொ டிரந்தவ ரெந்தாய், வீந்தவ ரென்பவர் வீந்தவ ரேனு, மீந்தவ ரல்ல திருந்த வர் யாரே", கம்ப. வேள்வி. ௩௦. புறநா. 165: 6-2

திணை - பொதுவியல்; துறை - பொருண்மொழிக்காஞ்சி.

அவனை[1] மாங்குடிகிழார் பாடியது.

[illegible] நெல்லையரியும் பெரிய உழவர் செஞ்ஞாயிற்றினது வெயிலை வெறுப்பின் தெளிந்த கடற்றிரையின்மேலேபாயும் திண்ணிய திமிலையுடைய வலிய நுளையர் வெம்மையையுடைய மதுவையுண்டு மெலலிய குரவைக்கூத்திற்கேற்ற தாளத்தைபாடும் கடற்றுவலையாலே தழைத்த தேன்பரந்த புன்னையினது மெலலிய பூங்கொத்தாற்செய்யப்பட்ட மாலையைச்சூடிய ஆடவர் விளங்கிய வளையையுடைய மகளிர்க்கு முதற்கைகொடுக்கும் வண்டுமொய்ப்ப மலர்ந்த குளிர்ந்த நறிய கானலிடத்துக்
கடன்முள்ளிப்பூவாற்செய்யப்பட்ட மாலையையுடைய விளங்கிய வளையயணிந்தமகளிர் பெரிய பனையினது நுங்கின் நீரும் பொலிவினையுடைய கரும்பினது இனியசாறும் உயர்ந்தமணலிடத்துத் திரண்ட தெங்கினது இனிய இளநீருடனே கூடக்கலந்து இம்மூன்றுநீரையுமுண்டு மூன்றுநீரையுடைய கடற்கண்ணேபாயும் பரிக்கவொண்ணாத பலமக்களும் வாழ்தலையுடைய நலலவூர்கள்பொருந்திய கெடாரு ஊப்பாதக்காவாத வண்மையையுடைய பெரிய வேளாகிய எவ்வியது நீர்வழங்கும் வாய்த்தலைகளையுடைய மிழலைக்கூற்றத்துடனே வயலிடத்துக் கயலைமேயும் நாரை போரின்கண்ணேயுறங்கும்பொன்னணிந்த யானையையுடையபழையமுதிர்ந்த வேளிரது திரண்ட செலவினையுடைய முத்தூற்றுக் கூற்றத்தைக் கொண்ட வெற்றிபொருந்திய உயர்ந்த குடையினையும் கொடியாடிபொலிந்த

தேரினையுமுடைய செழிய
லாது பட்டுப் போவதாக

! நின்றுநிலைப்பதாக நினது நாளாகிய மீன்; நில
நின்பகைவருடைய நாளாகியமீன்; நின்னொடு

பழைதாய்முதிர்ந்த உயிரினும் உயிருடனே நின்றுமுதிர்ந்த
நினது வெற்றிக்குடியோடு மூத்த சீரிய குடியின்கட்

உடம்புபோன்ற போரால வாழ்வார் நினது முயற்சிவலியை
சிறந்த வாட் சிலர் நின்வண்மையைச் சொல்ல ஒள்ளிய

வாழ்த்த இரக்கும்பரி
வளையையுடைய மகளிர்

பொற்கலத்தின்கண் ஏந்திய குளிர்ந்த நறுநாற்றத்தையுடைய மதுவைமடு
ப்ப அதனையுண்டு மகிழ்ச்சிமிக்கு அப்படி இனிதாக நடப்பாயாக ; பெரும!
அவ்வொழுக்கம்வல்லவரை வாழ்ந்தோரென்றுசொல்லுவர் அறிவுடையோர் ;
பழைய புகழ்தான், பரந்த இடத்தையுடைய உலகத்தின்கண்ணே பிறந்து
பரக்க ஒழுகாது நின்றுமாய்ந்தோர் பலர் ; அவர் வாழ்ந்தோரெனப்படாராத
லான்.—எ - று.

மேல் எண்ணப்பட்ட பெயரெச்சமூன்றும் மிழலையென்னும்
பெயர் கொண்டன ; அவை உம் உந்தாய்நின்றன.

மூந்நீர்ப்பாயும் நல்லூரென்க.

உயிரினும் சிறந்த, ஆக்கையன்ன வாளின்வாழ்நரெனக்கூட்டி
உயிர்க்கு யாக்கைபோலவும் யாக்கைக்கு உயிர்போலவும்
மாயிருக்கின்ற வாளின் வாழ்நரென்க.
இன்றியமையாது இரண்டு

நின்குடியொடுமூத்த நின்யாக்கையன்ன விழுத்திணைக்கண்
உளராய் நின்னுயிரினுஞ்சிறந்த வாளின்வாழ்நரெனக்கூட்டினுமமையும்.

செழிய ! நின் நாண்மீன் நின்றுநிலைஇயர் ; நின்பகைவர்மீன்
படாஅச் செலீஇயர்; உலகத்துத் தோன்றி இசைசெலச்செல்லாது
விளிந்தோர்பலர் ;

சீஇ அவர் வாழ்ந்தோரெனப்படார்; ஆதலால், பெரும! வாழ்ந்த நாவல் மடுப்ப மகிழ்சிறந்து இனிது ஒழுகு; அதுவல்லுநரை வாழ்ந்தோரென்பவெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

தாங்காவிளையுளென்பதூஉம் பாடம்.

ஆங்கது, ஒருசொல்; ஆங்கு, அசைநிலையுமாம்.

இனி, தொல்லிசையை யுடைய உலகத்துத்தோன்றி மேற்சொல்லப் பட்ட நன்மைகள் தமக்குப் பரக்கவொழுகாது நின்று விளிந்தோர் பலரென உரைப்பாருமுளர்.

இது, நிலையாமைகூறி இனிது ஒழுகென்றமையாற் காஞ்சி.

பொருண்மொழிக்

(உ௪)

---

(உரு.) மீன்றிகழ் விசும்பிற் பாயிரு ளகல
வீண்டுசெலன் மரபிற் றன்னியல் வழாஅ
துரவுச்சினந் திருகிய வுருகெழு ஞாயிறு
நிலவுத்திகழ் மதியமொடு நிலஞ்சேர்ந் தாஅங்
குடலருந் துப்பி னொன்றுமொழி வேந்தரை
யணங்கரும் பறந்தலை யுணங்கப் பண்ணிப்
பிணியுறு முரசங் கொண்ட காலை
நிலைதிரி பெறியத் திண்மடை கலங்கிச்

---

௩-௪. சேர சோழர்க்கு ஞாயிறும் மதியமும் உவமை; புறநா. ௫௫: ௪-௫; ௩௬௭: ௧௩-௪.

௫. வஞ்சினம்: புறநா. எக, எஉ, எ௩; "தன்பான் மனையா ளயலான் றலைக கண்டு பின்னு, மின்பா லடிசிற் கிவர்கின் றகைப் பேடி போலா, நன் பால பசுவே துறந்தார் பெண்டிர் பாலர் பார்ப்பா, ரென்பாரை யோம்பே னெனில்யானவ னாக வென்றான்" (சீவக. ௪௪௩); "நின்னையறி வன்பெரிது நின்முலறயு ளாய,கன்னியையோர் காளைபிற னெய்துவது கண்டு,மன்னுமண விலதுள்வயி றாவயில கின்றாயக், கின்னுமுளவோ புதிய வென்றமிக நக்கான்" (சூளா. அரசியல். க௫௬); "வினையிலென் மகன்றனுயிர் வேறுசெய் வித்தோனைக், குனிசிலையி னுனையுயிர் கோறலபுரி யேனேன், மனைவியய லான் மருவல கண்டுமவள் கையாற், றினையளவு மோர்பொழுது தின்றவனு மாவேன்" வில்லி- பாரதம், பதின்மூன்றாம்போர். க௮௪.

௫-எ. வென்ற அரசர் பகைவருடைய முரசைக் கவர்ந்து விடுதல்மரபு; புறநா. உ௬ : ௬-எ; எஉ : ௮-௯; கஎ௯: ௪; "அரசுபட வமருழக்கி, முரசுகொண்டு களம்வேட்ட.........வேந்தே", "வேந்த, ரின்னிசை முரச மிடைப்புலத் தொழிய.. ...புறம் பெற்ற" (மதுரை. கஉ௮ - ௩௦; ௩௪௮-௫௦); "எழுவர் நல்வல மடங்க வொருபகல், முரசொடு வெண்குடை யகப் படுத்து" அகநா. ௩௬.

௮. மடை - மூட்டுவாய்; புறநா. க௫௦.

## புறநானூறு மூலமும் உரையும்.

சிறைதலுய்ர் தன்றோ நின்வேல் செழிய
முலைபொலி யாக முருப்ப நூறி
மெய்ம்மறந்து பட்ட வரையாப் பூசல்
லொண்ணுதன் மகளிர் கைம்மை கூர

வயிரமல் கடக்கு முழ்மென்
குழையிருங் கூந்தல் கொய்தல் கண்டே.

திணை - வாகை ; துறை - அரசவாகை.

அவனைக் கல்லாடனர் பாடியது.

இ - ள்.—மீன்விளங்கும் வானத்தின்கண் பரந்த இருள்நீங்க ஓங்கிச் செல்லுந்தன்முறைமையையுடைய தன்றுதன்மையிற் பிழையாத வலிய வெம்மை *முறுகிய உட்குப்பொருந்திய ஞாயிறு நிலாவிளங்கும் திங்களுடனே நிலத்தைப்பொருந்தினாற்போலப் பகைத்தற்கரிய வலியையுடைய வஞ்சினங்கூறிய இருவேந்தரை வருத்துதற்கரிய போர்க்களத்தின்கண்ணே மாயப்பொருது அவருடைய வாராற் பிணிப்புற்ற முரசத்தைக்கொண்டகாலத்து நின் றநிலையிலேநின்று நின்னைச்சூழ்ந்துகொண்டவீரரைப் புரிந்தெறிதலால் திண்ணிய கொளுத்துக்கலங்கிக் கெடுதல் பிழைத்தது, நினதுவேல் ; செழிய! முலைபொலிந்தமார்பம் அழல அறைந்துகொண்டு அறிவுமயங்கியுற்ற அளவற்ற அழுகைபாரவாரத்தையுடைய ஒண்ணுதலமகளிர் கைம்மைகோன்பிலேமிக விளங்கும் அறலையொக்கும் அழகிய மெல்லிய குவிந்த கரிய மயிரினைக்கொய்தபரிசைக்கண்டு.—எ - று.

செழிய ! மகளிர் கூந்தல்கொய்தல்கண்டு நின்வேல் சிதைதலுய்ந்த தெனக் கூட்டுக.

ஈண்டுச்செலமரபெனவும், ஐம்பாற்குழையிருங்கூந்தலெனவும் பாடமோதுவாருமுளர்.

உய்ந்தன்றே : ஓ, அசைநிலை.

(உரு)

---

---

அ - ௬. தலைவனது வேலினைப் புகழ்ந்ததற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ௧௭ - இளம்.

௧௦. உருப்ப: புறநா. ௨௩௭ : ௧௦.

௧௧. மெய் - அறிவு; "விதமுறு வடிவங் கண்டே மெய்யொருப் பட்டிலை" (திருவால. ௩௦: ௩௧); பூசல் - அழுகையாரவாரம்; "கரையாத் தேனிடு பூசல்கண்டு மொன், றுரையாய" கம்ப. கிட்கிந்தா. அரசியல். ௮.

* முற்றிய - மிகுந்த; சீவக. ௧௫௦௩; காஞ்சிப். திருநகா. ௧.

---

# புறநானூறு மூலமும் உரையும்.

[illegible]

(௨௬.) நளிகட லிருங்குட்டத்து
வளிபுடைத்த கலம்போலக்
களிறுசென்று களனகற்றவுங்
களனகற்றிய வியலாங்க
ணொளிறிலைய வெஃகேந்தி தொல். ௧௫ : ௫
யரைசுபட வமருழக்கி
யுரைசெல முரசுவெளவி
முடித்தலை யடுப்பாகப்
புனற்குருதி யுலைக்கொளீஇத்

தொடித்தோட் டுடுப்பிற் றுழந்த வல்சியி
னடுகளம் வேட்ட வடுபோர்ச் செழிய
வான்ற கேள்வி யடங்கிய கொள்கை
நான்மறை முதல்வர் சுற்ற மாக
மன்ன ரேவல் செய்ய மன்னிய
வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே

---

௧. புறநா. ௨௰; ௧.

௧ - ௩. புறநா. ௧௩ ; ௫ - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

௫. ஒளிறுதல - விளங்குதல ; (புறநா. ௧௭௭ : ௧) ; "ஒளிறுவாள் விழுப்புண்" (நெடுநல். ௧௭௨) ; "ஒளிறுவாண் மறவரும்" மணி. ௧ : ௯௮.

௬. மு. மதுரை. ௧௨௮.

௭. புறநா. ௨௫ : ௫ - ௭ - ஆம்அடியின் குறிப்பைப் பார்க்க.

௮-௰. "ஆண்டலை யணங்கடுப்பின், வயவேந்த ரொண்குருதி, சினத் தீயிற் பெயர்பு பொங்க......தொடித்தோட்கை துடுப்பாக, வாடுற்ற வூன் சோறு" (மதுரை. ௨௯-௩௫); "முடித்தலை யடுப்பிற் பிடர்த்தலைத் தாழித், தொடித்தோட் டுடுப்பிற் றுழைஇய வூன்சோறு" சிலப். ௨௬ : ௨௪௨-௩.

௧௧. களம் வேட்டலென்பது, பலிகொடுத்தலென்றும் களவேள்வி செய்தலென்றும் வழங்கும் ; (புறநா. ௨௬ : ௧௨) ; "கறவுகொ ணெஞ்ச மொடு களம்வேட் டன்றே" (மநுத. ௪௦௦) ; "அரசுகெட......களம் வேட்ட,வடுதிறலுயர் புகழ்வேந்தே" (மதுரை. ௧௨௮ - ௩௦) ; "பாண்டியன் சோழர்க்காய்ந்து, பெருங்கள வேள்வி செய்த பீடுடைக் காட்டு காட்டு"(திருவால. ௪௪ : ௫௮); "பிடித்தாடி யன்ன பிறழ்பற்பே யாரக, கொடித்தானை மன்னன் கொடுத்தான்-முடித்தலைத், தோளொடு வீழ்ந்த தொடிக்கை துடுப் பாக, மூளைஞ் சோற்றை முகந்து" (பு - வெ. ௮ : ௯); அடிசின வேட்டதற்கு மேற்கோள் ; தொல். மரபு. சூ. ௭௨ - பேர்.

௧௨. கொள்கை-விரதம்; "தாவில் கொள்கைத் தந்தொழின் முடிமார்"

முருகு. அகூ.

'கூ, புறநா. கஎ : க - ச ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

கஉ-ரு. "ஆன்றகேள்வி...வாள்வேந்தே எனவரும் அடிகளில், பார்ப்பார் வேட்பித்தவாறும் அரசன் வேட்டவாறும் கண்டுகொள்க" (தொல்.



நோற்றோர் மன்றநின் பகைவர் நின்னொடு
மாற்றா ரென்னும் பெயர்பெற்
றாற்றா ராயினு மாண்டுவாழ் வோரே.

திணையும் துறையும் அவை,
அவனை மாங்குடிகிழார் பாடியது.

இ - ள்.—†பெரிய கடலின்கட் பெரிய ஆழத்திடத்தது காற்றாற்புடைக்கப்பட்ட மரக்கலம் நீரைக்கிழித்து ஓடுமாறுபோலக் களிறுசென்று போர்க்களத்தை இடமகலச்செய்ய அவ்வாறு களமகலச்செய்த பரந்த இடத்தின்கண் விளங்கிய இலையையுடைய வேலேயேந்தி வேந்துபடப் போரைக்கலக்கிப் புகழ்பரக்க அவர்முரசைக்கொண்டு முடித்தலையை அடுப்பாகக்கொண்டு குருதிப்புனலாகிய உலையின்கண் தசையும்மூளையுமுதலாயினவற்றைப்பெய்து வீரவளையையுடைய தோளாகிய துடுப்பால துழாவியடப்பட்ட உணவால அடுகளத்தின்கட் களவேள்விவேட்ட கொலலும்போரையுடைய செழிய! அமைந்த கேள்வியையும் ஐம்புலனுமடங்கிய விரதங்களையும் நான்கு வேதத்தையுமுடைய அந்தணர் சுற்றமாக வேந்தர் அதற்கேற்ப ஏவல்செய்ய நிலைபெற்ற வேள்வியைச்செய்துமுடித்த வாய்த்தவாளினையுடைய வேந்தே! தவஞ்செய்தார், யாவர்க்குந்தெளிவாக, நின்னுடைய பகைவர்; நினக்குப் பகைவரென்னும் பெயரைப்பெற்று நின்னொடு போர்செய்தற்கு மாட்டாராயினும் அத்துறக்கத்து வாழ்வோர்.—எ - று.

களனகற்றவுமென்னும் உம்மை, அசைநிலை.

மன்னியவேள்வியென்றது, களவேள்வியொழிந்த வேள்விகளை.

செழிய, வேகதே, ஆற்றாராயினும், ஆண்டுவாழ் வோராகிய நின்பலக வர் மாற்றாரென்னும் பெயர்பெற்று நோற்றாரெனக்கூட்டுக. (உகூ)

---

புறத்திணை. ர. கஈ - இளம்); "களிகடலிருங்குட்டத்து எனனும் புறப்பாட்டினுள் அந்தணன்வேட்பித்தலும் அரசன் வேட்டலும்வந்தது" ஷை ஷை உ0 - ந.

கா. "நோற்றோர் மன்ற தோழி" குறுந். ௩௪௪.

கஅ - அ. "புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்க மென்னுமீ தருமறைப் பொருளே" (கம்ப. நகர. ரு) என்னுஞ்செய்யுள் இங்கே அறியற்பாலது.

* மு. அரசன் களவேள்வி வேட்டதற்கு மேற்கோள்; (தொல். புறத்திணை. ரு. கஎ - இளம்); "களிகடலிருங்குட்டத்து எனனும் புறப்பாட்டுப் பலிகொடுத்தது" ; ஷை. ஷை. ந. உக - ந.

† "வங்கம் போழ்முந்நீர்' பு - வே. அ: ௩௧.



(உஎ.) சேற்றுவளர் தாமரை பயந்த வொண்கேழ்
நூற்றித ழலரி னிரைகண் டன்ன
வேற்றுமை யில்லா [1] விழுத்திணைப் பிறந்து
வீற்றிருந் தோரை யெண்ணுங் காலை
யுரையும் பாட்டு முடையோர் சிலரே
மரையிலை [2] போல மாய்ந்திசினோர் பலரே
புலவர் [3] பாடும் புகழுடையோர் விசும்பின்

வலவ னேவா வான வூர்தி
யெய்துப வென்பதஞ் செய்வினை முடித்தெனக்

---

௩. 'விழுமம்' சிறப்பாகிய குறிப்பையுணர்த்துதற்கு தொல். உரி. ௬. ௫௭ - சே; ஷெ ஷெ ஷெ. ௫௫ - ந; இ

மேற்கோள் ;
- வி. ௨௮௨.
உரை.

௧ - ௪. சாதிக்கேற்றவுவமையென்பர்; இ - வி. ௫. ௬௩௧ - உரை.

௫. புறநா. ௧௪௫: ௧ - ௩ ; "நலலிசை நிலை இ", "நல்லிசை நிலைஇய நனந்தலை யுலகத்து" (பதிற். ௧௪, ௮௬); "தொலையா நல்லிசை யுலகமொடு நிற்ப", "செல்லா நல்லிசைப் பெயரொடு நட்ட" (மலைபடு. ௭௦, ௩௮௮); "மண்ணின்மேல் வான்புகழ் நட்டானும்......சாவாவுடம்பெய்தினார்" (திரி. ௧௬); "ஒருவனை திரண் டியாக்கை யூன்பயினரம்பின் யாத்த, வுருவமும் புகழு மென் றுங் கவற்றினுழ் காத்துவந்து, மருவிய வுருவ மிங்கேமறைந்துபோ மற்ற யாக் கை, திருவமர்ந் துலக மேத்தச் சிறந்துபின் னிற்கு மன்றே", "பொன்று மிவ் வுட லின்பொருட், டென்று நிற்கு மிரும்புக, ழின்று நீர்கழிந் தீர்களாற், குன் றின் மேற்குடைவேந்திர்காள்" (சூளா. சீயவதை. ௨௦௪; ஷெ. அரசியல். ௨௨௬) இவ்வடியை "புகழ்தான் உரையும் பாட்டுமென இருவகைப்படும்; அவற் றுள், உரைப்பார் உரைப்பவையென எல்லார்க்குமுரியவழக்கினையே எடுத்தா ராயினும் இனம்பற்றிப்புலவர்க்கேயுரிய செய்யுளும் கொள்ளப்படும்; படவே, பாடுவார் பாடுவனவெல்லாம் புகழாமென பதூஉம் பெற்றும்" (குறள். ௨௩௨) என உரைநடையாக அமைத்தருளினர் பரிமேலழகர்.

௬. "மரையிலையின் மாய்நதார் பலர்" நாலடி. ௩௫௧.

௮. "ஊராநற்றேர்" (மணி. ௬ : ௩௧);

"பிறைசேர்சென்னி, மாசறு வாத்துவள்ளல்" கந்த. காவிரிநீங்கு. ௩௪.

யானைக்குப் பிறப்பிடமாயிருக்கிற காட்டிலும்' அண்டிரனைப்பாடினோர், யானை மிகவுமுடையனென்று அவன் கொடைச்சிறப்புக் கூறியவாறு.

ஆய்க்கு அண்டிரனென்பதும் ஒரு பெயர்.

(கஙக)

---

ச. புறநா. கஉகூ : கூ - ஆம் அடிக்குறிப்பைப்பார்க்க.

---

(கஙஉ.) முன்னுள்ளு வோனைப் [1] பின்னுள்ளி னேனே
யாழ்கென் னுள்ளம் போழ்கென் னாவே
பாழூர்க் கிணற்றிற் றூர்கவென் செவியே
நரந்தை நறும்புன் மேய்ந்த கவரி
ரு குவளைப் பைஞ்சுனை பருகி யயல
தகரத் தண்ணிழற் பிணையொடு வதியும்
வடதிசை யதுவே வான்றோ யிமயந்

---

ச. "கவரி...நரந்தங்கனவும்" பதிற். கக.

ரு. புறநா. கககூ : க ; ~~"குவளையும் பைஞ்சுனை" மலைபடு. உரை~~

(பி - ம்.)—1 'பின்னுள்ளின் யானே'



தென்றிசை யாஅய் குடியின் றாயிற்
பிறழ்வது மன்னோவிம் மலர்தலை யுலகே.

திணையும் துறையும் அவை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—யாவரினும் முன்னே நினைக்கப்படுமவனைப் பின்பே நினைத்தேனை யான்; அவ்வாறு நினைந்தகுற்றத்தால் எனதுள்ளம் அமிழ்ந்திட்போவதாக; அவனையன்றிப் பிறரைப்புகழ்ந்தநாவும் கருவியாற் பிளக்கப்படுவதாக; அவன்புகழன்றிப் பிறர்புகழைக்கூறக்கேட்ட எனது செவியும் பாழ்பட்ட ஊரின்கட் கிணறுபோலத் தூர்வதாக; நரந்தையையும் நறியபுலலையு மேய்ந்த கவரிமாக் குவளைப்பூவையுடைய பசிய சுனையின்நீரை நுகர்ந்து அதன் பக்கத்தவாகிய தகரமரத்தினது குளிர்ந்தநிழலின்கண் தனது பிணையுடனே தங்கும் வடதிசைக்கண்ணதாகிய வானைப்பொருந்தும் இமயமலையும் தென்றிசைக்கண் ஆய்குடியும் இல்லையாயின் இந்தப் பரந்த இடத்தையுடைய உலகம் கீழ்மேலதாகிக் கெடும்.—எ - று.

1 'முன்னுள்ளு வோனைப் பின்னுள்ளினேனே' என உள்ளம் ஆழ்தற்குக்காரணங்கூறினமையால், பிறரைப்புகழ்ந்தநாவெனவும், பிறர்புகழ்கேட்ட செவியெனவும் ஏனையவற்றிற்கும் காரணம் வருவித்துரைக்கப்பட்டது.

அன்றி வடதிசை, தேவருலகோடு ஒத்தலான், இமயத்தால் தாங்கவேண்டுவதில்லை; தென்றிசைக்கண் ஆய்குடி தாங்கிற்றில்லையாயின், இவ்வுலகுபிறழும்; அதனால இமயத்துக்கு முன்னுள்ளப்படுவோனைப் பின்னுள்ளினேனாதலால், எனதுள்ளம் ஆழ்க; எனது நாப்போழ்க; எனதுசெவி தூர்வதாக வெனநதாக்கி உரைப்பினுமமையும். (கஉ)

---

அ. 'திசை' என்னுஞ்சொல் ஏழாம்வேற்றுமையுருபாக வந்ததற்கு மேற்கோள்; நன்-மயிலை. ரு. ௦௯.

. (பி - ம்.)—1 'இமயத்திற்கு ஒருதரமாக
உளனாகவும் பிறரிசையைக்கேட்ட செவிதூர்க;

உலகத்தைத் தாங்கும் ஆய்
கேட்டுப் பிறவு நினைத்த

வுள்ளம் ஆழ்க ; நினைத்தபடி பிறரைப்பாடியநாட் போழ்வதாகவென
மொழிந்தவைவற்றிற்கும் காரணம் வருவித்துக்கொள்க'.

உள்ள

---

(காஞ்சி.) மெல்லியல் விறலிநீ நல்லிசை செவியிற்
கேட்பி னல்லது காண்பறி யலையே
காண்டல் வேண்டினை யாயின் மாண்டநின்
விரைவளர் கூந்தல் வரைவளி யுளரக்
௫ கலவ மஞ்ஞையிற் காண்வர வியலி

௫. "மயிலகண்டன்ன மடநடை மகளிர்" (முருகு. ௨0௫); "நன்மா மயிலின் மென்மெல வியலி" மதுரை. ௬0௮.



மாரி யன்ன [1] வண்மைத்
தேர்வே ளாயைக் காணிய சென்மே.*

திணை - அது ; துறை - விறலியாற்றுப்படை.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—மெல்லிய இயல்பினையுடைய விறலி, நீ நல்லபுகழைச் செவியாற் கேட்பினல்லது அவன்வடிவைக் காண்டலறியாய்; காண்டலை விரும்பினையாயின், மாட்சிமைப்பட்ட நினது மணம்வளரும் கூந்தலிலே வரையிடத்துக் காற்றுலவுதலைப்பப் பீலியையுடைய மயில்போலக் காட்சியுண்டாக நடந்து மழைபோன்ற வண்மையையுடைய தேரினையுடைய வேள் ஆயைக் காணச்செல்வாயாக.—எ - று.

(௩௯௪.) இம்மைச் செய்தது மறுமைக் காமெனு
மறவிலே 1 வணிக னுயலன் பிறருஞ்

க - உ. புறநா. ௧௯௧: ௧௯ - ௫; "ஏற்றகை மாற்றாமை யென்னானுந் தாம் வரையா, தாற்றாதார்க் கீவதா மாண்கடன்" (நாலடி. ௯௮); "இம்மை யாற் செய்ததை யிம்மையே யாம்போலு, மும்மையே யாமென்பா ரோரார் காண்" (திணைமாலைநூற்றைம்பது, ௧௨௩); "வறியார்க் கொன்றீவதே யீகைமற் றெல்லாங் குறியெதிர்ப்பை நீரதுடைத்து" (குறள், ௨௨௧)

(பி - ம்.)—1 'வாணிகனுஅயல்லன்பிறவும்'



சான்றோர் சென்ற நெறியென
வாங்குப் பட்டன் றவன்கைவண் மையே *

திணை - அது, துறை - இயன்மொழி.
அவனை அவர் பாடியது.

இ - ள்.—இப்பிறப்பிலே கட்செய்ததொன் றுமறுபிறப்பிற்குதவுமென்று கருதிப் பொருளை விலையாககொடுத்து அதற்கு அறங்கொள்ளும்வணிகன்

ஆயல்லன்; அமைந்தோர் பிறரும் போயவழியென்று உலகத்தார்கருத அந்த நற்செய்கையிலே பட்டது, அவனது கைவண்மை.—எ - று.

அன்றி, ஆய் அறவிலைவணிகனல்லன்; பிறரும் சான்றோர்சென்ற நெறியெனக்கருதி அச்செய்கையிலேபட்டதன்று, அவன் கைவண்மை யென்

றைப்பாருமுளர். இதற்குப் பட்டன்றெனபது மறைப்பொருள்படாமை யின், பட்டதன்றென்பது பட்டன்றென விகாரமாகக்கொள்க. (கஅ௪)

"வைப்பாலோவள்ளல் வழங்குவான வாணிகன" (சிறுபஞ்ச. ௩௪); "ஆர்று நர்க்க ளிப்போ ரறவியோ பகர்வோர்" (மணி. கக: க௱); "சிறுநன்றி யின் றிவர்க்கியாஞ் செயதககா ஞ்ப், பெறுநன்றி மன்றவும் பெரிதென் - றுறு நன்றி, தானவாய்ச செயவதூஉந் தானமன றென்டவே, வானவாமுள்ளத் தவர்" யா - வி. எழுத். ௩. ௬ - ம்மேற்.

* மு. 'இது பிறருஞ் சான்றோா செய்நற்கெறியென்றமையின், அய லோரையும் அடுத்தூர்ந்தேத்தியது' (தொல். புறத்திணை. ௩. ௩௫) என்பர் நச்சினார்க்கினியர்.

---

(௬௱௫.) கொடுவரி வழங்குங் கோடுயர் நெடுவரை
யருவிடர்ச் சிறுநெறி யேறலின் வருந்தித்
தடவரல கொண்ட தகைமெல் லொதுக்கின்
வளைக்கை விறலியென் பின்ன ளாகப்
௫ பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
வரிநவில் பனுவல் புலம்பெயர்ந் திசைப்பப்

க - ௨. "உயர்நெடுங்குன்றம் படுமழை தலைஇச், சுரநெறி மாறிய மருங்கில், கடஞ்செல் வரிநிறம் திகழ்தரு கானவ ரறியாக் கணைக்கொடு டோகை யிற் கதுப்பிகுத் தசைஇ, விலங்குமலைத் தமர்ந்த சேயரி நாட்டத், திலங்கு வளைவிறலியர்" மலைபடு. ௪க - ௬.

௬. "வரியெனப்படுவது வகுக்குங்காலைப், பிறந்த நிலனும் சிறந்த தொ ழிலு, மறியக்கூறி யாற்றுழி வழங்கல", "கண்கூடு கான்வரியுள்வரி புறவரி, கிளர்வரி யைநதோ டொன்பதோ வுரைப்பிற், காட்சி தேர்ச்சி யெடுத்துக்கோ ளென, மாட்சியின் வரூஉ மெண்வகை நெறித்தே" சிலப். அ: ௭௭, க0அ - உரை, மேற்.

படுமலை நின்ற பயங்கெழு சீறியா
ழொல்க லுள்ளமொ டொருபுடைத் தழீஇப்
புகழ்சால் சிறப்பினின் னல்லிசை யுள்ளி
வந்தனெ னெந்தை யானே யென்று
மன்றுபடு பரிசிலர்க் காணிற் கன்றொடு
கறையடி யானை யிரியல் போக்கு
மலைகெழு நாடன் மாவே ளாஅய்
களிறு மன்றே மாவு மன்றே
யொளிறுபடைப் புரவிய தேரு மன்றே
பாணர் பாடுநர் பரிசில ராங்கவர்
தமதெனத் தொடுக்குவ ராயி னெமதெனப்
பற்ற றேற்றாப் பயங்கெழு தாயமொ
டன்ன வாகநின் னூழி நின்னைக்
காண்டல் வேண்டிய வளவை வேண்டா
ருறுமுரண் கடந்த வாற்றற்
பொதுமீக் கூற்றத்து நாடுகிழ வோயே.

திணை - அது; துறை - பரிசிற்றுறை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—புலியியங்கும் சிகரமுயர்ந்த நெடியமலையின்கண் ஏறுதற் கரிய பிளப்பின்கட் சிறியவழியையேறுதலான் வருத்தமுற்று உடல்வளைவைப் பொருந்திய பயில அடியிட்டு நடக்கின்ற மெல்லியநடையினையுடைய வளையை யணிந்த கையையுடைய விறலி என்பின்வரப் பொன்னைக் கம்பியாகச்

செய்தாற்போலுற முறுக்கடங்கிய நரம்பினையுடைய வரிப்பொருண்மை யோடேயிலும் பாட்டு நிலந்தோறும் மாறிமாறி யொலிப்பப் படுமலைப்பாலை நிலைபெற்ற பயன்பொருந்திய சிறியயாழைத் தளர்ந்த நெஞ்சத்துடனே ஒரு

---

எ. படுமலைப்பாலை - பாலைபபண பன்னிரண்டனு ா ஒன்று; அது கைக்கிளை குரலாகத் தோன்றுவது.

அ. ஓலகா-தளரா; "ஒறகா வு ாளத் தொழியாஞ்சி" மணி. கரு :கஅ.

கக. "வயிரியமாகக ா...மலா நகணணி" (பதிற். உக); "மன்றில வதியுநர் சேட்புலப் பரிசிலர்" மலைபடு. சகஉ.

கஉ. புறநா. கஉக : கூ.

கக - உ. "பொருநர்க், குருகெழுபெருஞ்சிறப்பி, னிருபெயர்ப் பேராய மொ, டிலங்கு மருப்பிற் களிறு கொடுத்தும்" மதுரை. கூக - ச0உ.

உஉ. "மீக்கூற்றென்பது புகழ்; அதுமேலாய சொல்லாற் பிறந்த புக ழென்னுமேம்பாடெனப்பொருடந்து நிற்றலிற் பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை" நன் - வி. சூ. களஅ.

மருங்கிலேயுமேனத்துக்கொண்டு புகழ்த்தக்கமைந்த தலைமையையுடைய நின்று நலலபுகழை நினைந்துவநதேன், என்னுடைய இறைவா, யான் ; எநகாளும் மனநத்தின்கண்வந்த பரிசிலரைக்காணிற் கன்றுடனே * கறைபொருந்திய அடியையுடைய யானையை அணியணியாகச் சாய்த்துக்கொடுக்கும் மலையை யுடையநாடனே, மாவேளாகிய ஆயே, யாம்வேண்டியது: யானையுமன்று ; குதிரையுமன்று; விளங்கிய பொற்டையையுடைய குதிரையிற்பூட்டப்பட்ட தேருமன்று ; பாணரும் புலவரும் கூத்தர் முதலாயினருமாகிய அவர்கள் தமமுடைய பொருளென வளைத்துக்கொள்வாராயின அதனை எம்முடைய தென்று அவர்பானின்றும் மீணடு கைக்கொளளுதலைத் தெளியாத பயன் பொருநதிய உரிமையோடுகூடி மற்றும் அத்தன்மையவாக, நின்னுடைய வாழ்நாட்கள் ; யான்வநதது நின்னைக் காணடலவேண்டிய மாத்திரையே. பகைவரது மிகக மாறுபாட்டைவென்ற வலியையுடைய, யாவரும் ஒப்பப் புகழும் நாட்டையுடையாய்.—எ - று.

நாடுகிழவோய், யான்வநதது, களிறுமுதலாயினவேண்டியன்று ; நின்னைக் காணடலவேணடிய அளவே ; நின்னூழி அனனவாகவெனக்கூட்டுக.

அலலதூஉம், யானைமுதலாயினவன்றிப் பிறவற்றையும் பாண ர்முதலா யினர் தமதெனத்தொடுககுவராயினென இயைததுரைப்பினுமமையும்.

கொடுவரி, பணபுத்தொகைபபுறத்துப்பிற நத அன்மொழித்தொகை; ஆகுபெயருமாம்.

இனித், 'தகைமெலலொதுககின்' எனவும், 'வடிநவிலபனுவல' எனவும், 'ஒளிறுநடைபபுரவிய' எனவும் பாடமோதுவாருமுளர்.

வடிநவில பனுவல புலம்பெயாத்திசைப்பவென்றுகொணடு வடித்தல் பயின்ற பாட்டை இசைதோறும் பெயாத்துவாசிக்கவென்றுமைப்பாருமுளர்.

பொதுமீக்கூற்றம் பொதியிலுமாம். (கஙரு)

---

புறநா. ஙகூ : க - உ உரை.

---

(கஙசா.) யாழ்ப்பத்தர்ப் புறங்கடுப்ப
இழைவலந்த பஃறுன்னத்
திடைப்புரைபற்றிப் பிணிவிடாஅ
ஈர்க்குழாத்தோ டிறைகூர்ந்த
பேஎற்பகையென வொன்றென்கோ
வுண்ணாமையி னூன்வாடித்
தெண்ணீரிற் கண்மல்கிக்
கசிவுற்றவென் பல்கிளையொடு

ச - ரு. புறநா. சுகூ : ங - ச ஆம் அடிகளின் குறிப்பைப் பார்க்க ; கஙஅ : ரு.

பசியலைக்கும் பகையொன்றென்கோ
வன்னதன்மையு மறிந்தியார்
நின்னதுதாவென நிலைதளர
மரம்பிறங்கிய நளிச்சிலம்பிற்
குரங்கன்னபுன் குறுங்கூளியர்
பரந்தலைக்கும் பகையொன்றென்கோ
ஆஅங், கெனைப்பகையு மறியுனனை
யெனக்கருதிப் பெயரேத்தி
வாயாரநின் னிசைநம்பிச்
சுடர்சுட்ட சுரத்தேறி
யிவண்வந்த பெருநசையே
மெமக்கீவோர் பிறர்க்கீவோர்
பிறர்க்கீவோர் தமக்கீபவென
வனைத்துரைத்தனன் யானாக
நினக்கொத்தது நீநாடி
நல்கினை விடுமதி பரிசி லல்கலுந்
தண்புனல் வாயிற் * றுறையூர் முன்றுறை
நுண்பல மணலினு மேத்தி
யுண்குவம் பெருமநீ நல்கிய வளனே.

திணை - அது ; துறை - பரிசில்கடாநிலை.
அவனைத் துறையூர் 1 ஓடைகிழார் பாடியது.

---

௧0 'செய்த' என்பதன் குறிப்பாய் 'அன்ன' என்பது வந்ததற்கு மேற்கோள் ; தொல். வினை. சூ. ௩௭ - ந ; இ - வி. சூ. ௨௪௩ - உரை.

௧௩. "மகாஅ ரன்ன மந்தி" (சிறுபாண். ருகூ) ; "கடும்பறைக் கோடியர் மகாஅ ரன்ன, நெடுங்கழைக் கொம்பர்க் கடுவ னுகளினும்" மலைபடு. ௨௩௬ . ௭.

கக-ச. "ஒப்போன்கூற்றென்றோரேனும் சிறுபான்மை வலியாற்கொள்ளு மிடத்தும் தாவென்பது வருமெனக்கொள்க; 'நின்னது... ஒன்றென்கோ' எனவரும்" தொல். எச்ச. ரு. ரு0 - ந.

உக - உ. புறநா. கடச; க - உ ஆம் அடிகளின் குறிப்பைப்பாக்க.

உரு - ச. புறநா. கச0 ; ரு - அ.

உ௫ - ரு. புறநா. க : அ -கக ; சரு : உக - ரு ; ௫௫ : கஎ - உக.

* இது பாடிய புலவர் துறையூரினராதலின் அவ்வூர்த்துறைமணலைக் கூறினர்.

(பி - ம்.)—1 'அரிசில்கிழார்'



இ - ள்.—யாழ்ப்பத்தரின துபுறத்தையொப்ப இழைசூழ்ந்த பலதைய லினது இடைக்கண் உளவாகிய புரைகளைப்பற்றி ஒன்றோடொன்றுதொ டர்ந்தபிணிப்பு விடாதேகிடக்கின்ற ஈரினது திரளோடு தங்குதல் மிக்க பேணுகியபகையை ஒரு பகையெனப்பேனோ? உண்மையில் உடம்பு புலர்ந்து கண் தெளிந்தநீரால் நிறைந்து வியர்ப்புற்ற எனது பலசுற்றத்

தோடு பசிநோய்வருத்தும்பகையை
பட்ட எனதியல்லையும் அறியாராய்

ஒருபகை யென்பேனோ? அப்பெற்றிப்
நின்கைப்பொருளைத் தாவென்றுசொல்லி

எம்முடையநிலைகள் தளரும்படி மரங்கள்செறிந்த குளிர்ந்தமலையிற் குரங்கு போலப் பறித்துக்கொள்ளும் இயல்லையுடைய புல்லிய குறிய ஆறலைகள் வர் பரந்துவந்தலைக்கும்பகையை ஒருபகையென்பேனோ? எல்லாப பகையும் அறிவான் ஆயேயெனக்கருதி எமதுவாக்கினுல மிகவும் நினதுபெயரை வாழ்த்தி நின்னுடையபுகழை நச்சி ஞாயிறுசுடப்பட்ட சுரத்தின்கண்ணே

யேறி இவ்விடத்துவந்த பெரிய நச்சுதலையுடையேம் ; இவ்வனம் * வறுமை யுற்ற எங்களுக்கு ஒன்றை இடுவோரன்றே பயன்கருதாது பிறர்க்கு இடு மவர்களாவாரெனவும் எம்மையொழிந்த பிறர்க்கு இடுவோரன்றே பயன்கருதி யிடுதலால தங்களுககே இடுவோரெனவும் அவ்வளவாக யான் சொன்னே னாக, நினக்குப்பொருந்தியது நீ ஆராய்ந்து எமக்குப் பரிசிலதந்தனையாய் விடுவாயாக ; நாடோறும், குளிர்ந்தநீரோடும் வாய்த்தலைகளையுடைய துறை யூரின்கண் துறைமுன்னர் நுண்ணிய பலமணலினும் பலநாள் வாழ்கவென வாழ்த்தி உண்பேம், பெரும, நீதந்தசெலவத்தை.—எ - று.

பெரும, நீ நலகியவளத்தை அகமகிழும் ஏத்தி உண்பேம் ; நினக்கொத் தது நீ நாடிப் பரிசிலநல்கினை விடுமதியெனககூட்டுக.

'ஆயென' என்பதற்கு ஆயென்று பிறர்சொலலவென்றும், 'எமக்கீவோர் பிறர்க்கீவோர்' என்பதறகு எமக்கீவோர் எம்வறுமைகண்டு வருத்தமுறவோர் யாவர்க்கும் ஈவோரெனவும், 'பிறர்க்கீவோர்தமக'டப' என்பதற்குப் பிறர்க் குக்கொடுப்போர் அக்கொடுககப்படுகின்றோர் தமக்கேகொடுப்போராவ ரெனவுமுரைப்பாருமுளர்.

கசிவுற்றவெனபதற்கு இரக்கமுற்றவெனினுமமையும்.

பேஎற்பகையெனவென்புழி எனவும், ஆகலெகன பபகையுமெனபுழி ஆக்கும் அசைநிலை.

கண்டெணணிரின்மலகியெனவும், வாயாரப்பெயரேத்தியெனவும் மாற் றப்பட்டன. (கருசு)

* " வறியார்ககொன்று ீவதே யீகைமற்றெலலாம, குறியெதிர்ப்பை நீர துடைத்து " குறள், உஉக.

---

(கூஎ.) இரங்கு முரசி னினஞ்சால் யானை
முந்நீ ரேணி விறல்கெழு மூவரை
யின்னு மோர்யா னவாவறி யேனே

நீயே, முன்யா னறியு மோனே துவன்றிய

௧. 'இர்ங்கு' என்னும் உரிச்சொல் ஒலித்தற்றொழிற்பண்பிலவருதற்கு மேற்கோள் ; நன் - மயிலை. சூ. ௪௫௮ ; நன் - வி. சூ. ௪௫௧.

௨. முந்நீரேணி : புறநா. ௩௫ : ௧.



கயத்திட்ட வித்து வறத்திற் சாவாது
கழைக்கரும்பி னொலிக்குந்து
கொண்டல் கொண்டநீர் கோடை காயினுங்
கண்ணன்ன மலர்பூக்குந்து
கருங்கால் வேங்கை மலரி னாளும்
பொன்னன்ன வீசுமந்து
மணியன்னநீர் கடற்படருஞ்
செவ்வரைப் படப்பை நாஞ்சிற் பொருந
சிறுவெள் ளருவிப் பெருங்க லாடனே
நீவா ழியர்நின் றந்தை
தாய்வா ழியர்நிற் பயந்திசி'னோரே.

திணை - அது ; துறை - இயன்மொழி ; பரிசிற்றுறையுமாம்.
நாஞ்சில்வள்ளுவனை ஒரு சிறைப் [1] பெரியனார் பாடியது.

இ - ள்.—ஒலிக்குமுரசினையும் இனமமைந்தயானையையுமுடைய கடலாகிய எல்லையையுடைய நிலத்தின் கண் வென்றிபொருந்திய மூவேந்தரை இன்னமும் யானொருவனை பாடுமவரையறியேன் ; நீதான் முன்னேதொடங்கி யானறியுமவன் ; நீர்நிறைந்த பள்ளத்தின்கண் விதைத்தவித்து நீரின்மையாற் சாவாது கரும்புபோலத்தழைக்கும், மழையால் முகந்துசொரியப்பட்டநீர் கோடைகாயினும் மகளிர்கண்போன்ற குவளைமுதலிய மலர்பூக்கும், கரியதாளையுடைய வேங்கைமலரின் நாடோறும் பொன்போலும் அப்பூவைச்சுமந்து மணிபோலும் நீர் கடற்கட்செலலும் செவ்விய மலைப்பக்கத்தையுடைய நாஞ்சிலென்றுமலையையுடைய பொருந, சிறிய வெள்ளிய அருவியையுடைய பெரிய மலையையுடைய நாட்டையுடையாய், நீ வாழ்வாயாக ; நின்னைப் பெற்றோராகிய நின தந்தையும் தாயும்வாழ்க.—எ - று.

நீர் மலர்பூக்குமென இடத்துநிகழ்பொருளின்றொழில இடத்துமேல ஏறிற்று.

கோடைக்காயினுமென்பதுபாடமாயின், கோடைக்கட்காயினுமென்றும் கோடைக்கணுயினுமென்றுமுரைக்க.

முன்னின்ற பெயரெச்சமொன்றும், நாஞ்சிலென்னும் நிலப்பெயர்கொண்டன.

தன்பழமைதோன்றப் புகழ்ந்துகூறுவான், மூவரையும் பாடுமவரை இன்னுமறியேனென்றதாகக்கொள்க.

(கஙஎ)

---

சு. கழைக் கரும்பு : " ஆலைக் கலமருந் தீங்கழைக் கரும்பே " (மலைபடு. ககக); "மோடு கொண்டெழூஉ மூரிக கழைககரும்பு" சூளா. நாடு. உரு. கக. மணி - பளிங்கு ; புறநா. கரு௦ : உஎ.

கச - ரு. ரகரவீற்றுவியங்கோள் வாழ்த்துதற்பொருளில வந்ததற்கு மேற்கோள் ; நன் - மயிலை. சூ. ௩௩௭ ; இ - வ். சூ. உ௱கக - உரை.

(பி - ம்.)— 1 'பெயரியனார்', 'பெயரினார்'

(கஙஅ.) ஆனினங் கலித்த வதர்பல கடந்து
மானினங் கலித்த மலையின் ஒழிய
மீனினங் கலித்த துறைபல நீந்தி
யுள்ளி வந்த வள்ளுயிர்ச் சீறியாழ்
சிதாஅ ருடுக்கை முதாஅரிப் பாண
நீயே பேரெண் ணலையே நின்னிறை
மாறி வாவென மொழியலன் மாதோ
வொலியிருங் கதுப்பி னாயிழை கணவன்
கிளிமரீஇய வியன்புனத்து
மரனணி பெருங்குர லனைய னாதலி
னின்னை வருத லறிந்தனர் யாரே.

திணை - அது ; துறை - பாணாற்றுப்படை.

அவனை மருதனிளநாகனார் பாடியது.

இ-ள்.—பெற்றத்தினது இனமிக்க வழிபலவும்வந்து மானினமிக்க மலையின்கழிய மீனினந்தழைத்த துறைபலவற்றையுநீந்தி நின்னைநினைந்துவந்த வள்ளிய ஓசையையுடைத்தாகிய சிறியயாழையும் சிதாராகிய உடையையுமுடைய முதுபாணனே, நீதான், அவன்பாற் சிலகருதிப் போகின்றமையின் பெரிய எண்ணத்தை யுடையை ; நின்னுடைய தலைவன் இப்பொழுது போய்ப் பின் ஒருநாட் பரிசிற்குவாவென்றுசொல்லான் ; தழைத்த கரியகூந்தலையுடைய ஆயிழைக்குத்தலைவன், கிளி மருவிய அகன்றபுனத்தின்கண் மரப்பொதும்பின்கண்வைத்த பெரிய கதிரையொப்பனாதலின், நீ அவன்பாற் பரிசில் பெற்றுவருதற்கண் நின்னைப்*பழையபாணனென்று அறிவார்யார்.—எ-று.

'நின்னைவருதலறிந்தனர்யார்' என்றதன்கருத்து : நின்னை அறிவாரும் அறியாதசன்மையையாவையென்பதாம்.

அறிவார்யாமென்பது, அறிந்தவர்யாரெனக் காலமயக்கமாயிற்று.
நினக்கு அவன் பரிசில் தப்பாமல் தருமென்பான்,
நின்னிறையென்றான்.
'இனி.......குரலினையன' என்றது,
ம் வழக்கைப்பற்றிநின்றது.

இனியீடுவாயத்தாற்போலவனென்
(கா அ)

---

ரு. முதாரி - முதுமை ; சிலப். கசு : உச - உரை.
ச - ரு. புறநா. கக : ௩ - ச ; க ௧ : ப - ரு.
எ. "இரந்தோர்க் கெஞ்ஞான்றுங், காலம்பகராதார் காழிநகர் தேவாரம்
தாரே"
அ. ஆயிழைகணவன்: புறநா. ௩ : ௬ - ஆம்
அடிக்குறிப்பைப்பார்க்க.
* பொருந. கக - ௧௦௦.



(காகூ.) சுவலழுந்தப் பலகாய
சில்லோதிப் பல்லிளைஞருமே
யடிவருந்த நெடிதேறிய
கொடிமருங்குல் விறலியருமே
ரு வாழ்தல் வேண்டிப்
பொய்கூறேன் மெய்கூறுவ
லோடாப் பூட்கை யுரவோர் மருக

வுயர்சிமைய வுழாஅ நாஞ்சிற் பொருந
மாயா வுள்ளமொடு பரிசி றுன்னிக்
கனிபதம் பார்க்குங் காலை யன்றே
யீத லானான் வேந்தே வேந்தற்குச்
சாத லஞ்சாய் நீயே யாயிடை
யிருநில மிளிர்ந்திசி னாஅங் கொருநா
ளருஞ்சமம் வருகுவ தாயின்
வருந்தலு முண்டென் பைதலங் கடும்பே.

திணை - அது ; துறை - பரிசில்கடாநிலை.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—தோள் வடுப்படப் பலமுட்டுக்களையுங்காவிய சிலவாயமயிரையுடைய பல இளையோரும் அடிவருந்த நெடும்பொழுது ஏறிய கொடிபோலும் இடையினையுடைய விறலியரும் எமர் இவர் வாழ்தலைவிரும்பிப் பொய்சொல்லேன் ; மெய்சொல்லுவேன் ; புறக்கொடாத மேற்கோளையுடைய வலியோர் மரபிலுள்ளானே, உயர்ந்த உச்சியையுடைத்தாய் உழப்படாத நாஞ்சிலென்னும் பெயரையுடைய மலைக்குவேந்தே, மறவாதநினைவுடனே பரிசிற்குவந்து பொருந்திப் பின்புநின்று நின்மனமகிழும் செவ்விபார்க்கும் காலமல்ல, யான் வறுமையுற்று நிற்கின்றநிலைமை ; நினக்கு வேண்டிற்றுத்தருதலை அமையான், நின்னுடைய அரசன் ; அவ்வரசன் பொருட்டுச் சாதலுக்கு அஞ்சாய், நீ ; அவ்விடத்துப் பெரிய நிலம்பிறழ்ந்தாற் போல ஒருநாள் பொறுத்தற்கரிய பூசல் வருவதாயின், வருந்துதலுமுளதாம், எனது பசித்துன்பத்தையுடைய சுற்றம்.—எ - று.

அதனாற் போர்வருவதன்முன்னே பரிசில தந்துவிடுவாயாகவென்பது கருத்து.

வேந்து என்றது சேரனை.

எ. புறநா. கஉ௯ : ௪. கக. குறள், ௬அ௫ - பரிமேல் பார்க்க.
கஉ. மூதுரை, ௯. க - க௬. புறநா. க0௬.

# புறநானூறு மூலமும் உரையும்.

உஉ௬

(கசO.) தடவுநிலைப் பலவி னுஞ்சிற் பொருநன் 380 : 58
மடவன் மன்ற செந்நாப் புலவீர்
வளைக்கை விறலியர் [1] படப்பைக் கொய்த
அடகின் [2] கண்ணுறை யாக யாஞ்சில
வரிசி வேண்டினே மாகத் தான் [3] பிற
வரிசை யறிதலிற் றன்னுந் தூக்கி
யிருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர்
பெருங்களிறு நல்கி யோனே [4] யன்னதோர்
தேற்றா வீகையு [5] முளதுகொல்
[6] போற்றா ரம்ம பெரியோர்தங் கடனே.*

திணை - அது ; துறை - பரிசில்விடை.
அவனை [7] ஔவையார் பாடியது.

இ - ள்.—பெரிய நிலைமையையுடைய பலாமரத்தையுடைத்தாய காஞ்சிமலைக்கு வேந்தன், அறிவுமெல்லியன், நிச்சயமாக ; செவ்விய நாவையுடையபுலவீர், வளையணிந்த கையையுடைய விறலியர் மனைப்பக்கத்தின்கட் பதித்த இலைக்கு மேலே தூவுவதாக யாங்கள் சில அரிசிவேண்டினேமாக, தான் பரிசிலர்க்குதவும் வரிசை யறிதலால் எம்வறுமையைப்பார்த்தலேயன்றித் தனது மேம்பாட்டையும் சீர்தூக்கிப் பெரிய சுரஞ்சுரந்த மலைபோல்வதொரு பெரியயானையையளித்தான் ; ஆதலான், ஒருவற்கு ஒன்றனைக் கொடுக்குமிடத்து அப்பெற்றிப்பட்டதொரு தெளிவாக கொடையும் உளதோ தான் ? பெரியோர் தாங்கள் செய்யக்கடவ முறைமையைத் தெரிந்து பாதுகாத்துச் செய்யார்கொல்.—எ - று.

பிறவென்பது, அசைநிலை.
கொல்லென்பது, பின்பும் கூட்டியுரைக்கப்பட்டது. (கசo)

---

க. அகரவீறறுஉரிச்சொல் 'தடவுநிலை' என உகரம் பெற்றுவந்ததற்கு மேற்கோள் ; தொல். குற்றியலுகரப். சூ. எஅ - ந.

ச. கண்ணுறை - மேற்பூ ; புறநா. கஉக : ரு.

ரு - சு. 'பிற' என்னும் இடைச்சொல் அசைநிலையாகவந்ததற்கு மேற்கோள் ; தொல். இடை. சூ. கக-சே ; பேர் ; ந; இ-வி. சூ. உஎஎ-உரை.

ரு-அ. புறநா. கருகூ : உ0 - உ1 ; " சிரப்பான் மணிமவுலிச் சேரலர் கோன் றன்னைச், சுரப்பா டியான்கேட்கப் பொன்னொடைமா நீந்தார், இரப்பவரென்பெறினுங் கொள்வார் கொடுப்பவர், தாமறிவார் தங்கொடையின் சீர் " தமிழ்நாவலர்சரிதை, உச.

* மு. பாடாண்டிணைத்துறைகளுள், கொடுப்போரேத்தற்கு மேற்கோள் ; தொல். புறத்திணை.சூ. உக - இளம் ; ௸ ௸ ௸ ந. ரு - ந.

(பி-ம்.)—1 'படப்பைகொய்த' 2 'கையுறையாக' 3 'பிறர்' 4 'தேற்று' 5 'உண்டுகொல' 6 'போற்றுதம்ம' 7 'அவர்பாடியது'

'இன்னா



(கசக.) பாணன் சூடிய பசம்பொற் றாமரை
மாணிழை விறலி மாலையொடு விளங்கக்
கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட் டசைஇ
யூரீர் போலச் சுரத்திடை யிருந்தனிர்
யாரீ ரோவென வினவ லானாக்
காரெ ணொக்கற் கடும்பசி யிரவல
[1] வெல்வே லண்ணற் காணா வூங்கே
நின்னினும் புல்லியே மன்னே யினியே
யின்னே மாயினே மன்னே யென்று
முடாஅ போரா வாகுத லறிந்தும்
படாஅ மஞ்ஞைக் கீத்த வெங்கோ
கடாஅ யானைக் கலிமான் பேக
னெத்துணை யாயினு மீத்த னன்றென
மறுமை நோக்கின்றோ வன்றே
பிறர், வறுமை நோக்கின்றவன் கைவண் மையே.*

திணை-அது; துறை-பாணாற்றுப்படை; புலவராற்றுப்படையுமாம்.

வையாவிக்கோப்பெரும்பேகனைப் பாணர் பாடியது.

இ - ள்.—'பாணன்சூடிய ஓட்டற்ற பொன்னாற்செய்யப்பட்ட தாமரைப்பூ மாட்சிமைப்பட்ட அணியினையுடைய விறலியணிந்த பொன்னரிமாலையுடனேவிளங்கக் கடியகுதிரையைப்பூண்ட நெடியதேரைப் பிணிப்பைவிட்டு இளைப்பாறி ஊரின்கண் இருந்தீர்போலச் சுரத்திடையிருந்தீர் ; நீர்யாவிர் பாணரோ' என எம்மைகேட்டலமையாத புலலென்ற சுற்றத்தையும் மிக்கபசியையுமுடைய இரவலனே, வென்றிவேலையுடைய தலைவனைக் காண

---

க - உ. புறநா. கக : கக - எ ஆம் அடிகளின் குறிப்பைப்பார்க்க.

ரு. புறநா. கருo: உ௭.

எ. வினைத்தொகைக்கு இவ்வடி மேற்கோள் ; தொல். எச்ச. சூ. கக - ந.

அ - கூ. பொருந. ௩அ.

கஉ. மு. புறநா. கசரு : ௩.

ஓய,

கo - கஉ. புறநா. கசரு : க - ௩ ; "கானமஞ்ஞைக்குக் கலிங்க நல்கி வருந்திற லணங்கி னாவியர் பெருமகன், பெருகனு ணடைப் பேகனும்" சிறுபாண். அரு - எ.

க௩ - ரு. புறநா. க௩௯ ; நாலடி. ௱௯; குறள், உஉஉ.

* மு. பாணாற்றுப்படைக்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. இளம் ; ஷெ. ஷெ. சூ. ௩௬ - ந.

௩o-

(பி - ம்).—1 'வென்வேல'

டதன்முன் யாம் நின்னினும் வறியேம்; இப்பொழுது அவ்வறுமை நீங்கி இத்தன்மையேமாயினேம்; எந்நாளும், உடா போரா ஆதலை அறிந்துவைத்தும் படாத்தினை மயிலுக்குக் கொடுத்த எம்மிறைவன், மதமிக்க யானையினையும் மனஞ்செருக்கிய குதிரையினையும் உடைய பேகன், யாவராயினும் கொடுத்தல் அழகிதென்று மறுபிறப்பைநோக்கிற்றேவெனின், அன்று; பிறரது மிடியைக்கருதிற்று, அவனது கைவண்மை.—எ - று.

எங்கோ, பேகன்; அவன் கைவண்மை மறுமைநோக்கிற்றன்று; பிறர் வறுமை நோக்கிற்றெனக்கூட்டுக.

'நின்னினும்புல்லியேமன்'

என்பது, 'பண்டுகாடுமன்' என்பதுபோல நின்றது. ஒழிந்த மன், அசைநிலை.

(கசக)

---

(கசஉ.) அறுகுளத் துகுத்து மகல்வயற் பொழிந்து
[1] முறுமிடத் துதவா துவர்நில மூட்டியும்
வரையா மரபின் மாரி போலக்
கடாஅ யானைக் கழற்காற் பேகன்
௫ கொடைமடம் படுத லல்லது
படைமடம் படான்பிறர் படைமயக் குறினே.

திணை - அது; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—வற்றியகுளத்தின்கண்ணேபெய்தும் அகன்றவிளைநிலத்தின்கண்ணேசொரிந்தும் இவ்வாறு குளத்தும் விளைநிலத்தும் பெய்யாது களர்நிலத்தை நிறைத்தும் எவ்விடத்தும் வரையாத மாரியினையுடைய மழைபோல மதமிக்க யானையினையுடைய கழல்புனைந்த காலையுடைய பேகன் கொடையிடத்துத் தான் அறியாமைப் படுதலல்லது பிறர்படைவந்து கலந்தபொழின் அப்படையிடத்துத் தான் அறியாமைப்படான்.—எ - று.

க - டீ. "மழைவள்ளல்" சீவக. அகசுசு.

---

௫. புறநா. கசக : க0-கஉ; "கொடைமடம்படுதல்-அகாரணத்தாற்கொடைகொடுத்தல" (ஞானமிர்தம், கஎ-உரை); "கொடைமடம் வரையாது கொடுத்த லாகும்" (திவாகரம்) ; "கொடைமட மென்று சொல்ப வரையாது கொடுத்த லாமே" (சூடாமணி. ௯: க0); "வல்லார்வல்ல கலைஞருக்கு மறைநா லவர்க்குங் கடவுளர்க்கு, மில்லாதவர்கு முனிவர்க்கு மிரந்தோர் தமக்குந் துறந்தவர்க்குஞ், சொல்லா தவர்க்குஞ் சொலவர்க்குஞ் சூழுஞ் சமயா திபர்களுக்கு, மல்லாதவர்க்கு மிரவிமக னரியதானம் வழங்கினான்" (வில்லி—பாரதம், கிருட்டினன்றூது.௨ர ௫) என்னுஞ்செய்யுளிற் கொடைமடம் விளக்கக்கூறப்பெற்றிருத்தல காண்க ; "கொடைமடம்படுதலல்ல தென்பது வசைபோன்று புகழ்; இது செம்பொருளின்பாற்படும்" தொல். செய். சூ. கஉச - ந.

(பி - ம்.)—1 'உறுநிலத்துதவா'

29



*படைமடமென்றது, வீரரல்லார்மேலும், முதுகிட்டார்மேலும், புண்பட்டார்மேலும் மூத்தார் இளையார்மேலும் செல்லுதல். (கடஉ)

---

* "உடையிட்டார் புன்மேய்வா ரோடுநீர் புக்கார், படையிட்டார் பற்றேது மின்றி - நடையிட்டா, ரிவ்வகை யைவரையு மென்று மணுகார், ரே, செவ்வகைச் சேவகர் சென்று" (சிறுபஞ்ச. சக); "சடையினர் குடை

யினர் சாம்பற் பூச்சினர், பிடிகைப் பீலிப் பெருநோன் பாளர், பாடு பாணி யர் பல்லியத் தோளின, ராடு கூத்த ராகி யெங்கணு, மேந்தவா ளொழிய... வேண்டுவயிற் படர்தரக், கச்சையானைக் காவலர்நடுங்க......அதரிதிரித்த வாளேருழவன்" (சிலப். ௨௬ : ௨௨௫ - ௩௪) என்பனவும், 'ஏந்தநன்' 'கைப்படை', 'வீறின்மையின்' (சீவக. ௨௨௫௮, ௨௨௫௯, ௨௨௬௧) என்னுஞ் செய்யுட்களும், "மீனுய் வேலையை யுற்றுர் சிலர்சிலர் ப்சுவாய் வழிதொறு மேய்வுற்று, ருனர் பறவையின் வடிவுற் ருர்சிலர் சிலர்நான் மறையவ ருரு வானர், மானர் கண்ணிள மடவா ராயினர் முன்னே தங்குழல் வகிர்வுற்று, ரானர் சிலர்சில ரையா நின்சர ணென்றுர் நின்றவ ரரியென்றுர் " (கம்ப. அக்க. ௪0) என்பதும், " படைமயக் குற்ற போதும் படைமட மொன்றி லாதான்" .(சூடாமணி. ௯: ௧0) என்பதும் ஈண்டறியற்பாலன.

---

(௧௪௩.) மலைவான் கொள்கென வுயர்பலி தூஉய்.
மாரி யான்று மழைமேக் குயர்கெனக்
கடவுட் பேணிய குறவர் மாக்கள்
பெயல்கண் மாறிய வுவகையர் சாரற்
புனத்தினை யயிலு நாட சினப்போர்க்
கைவள் ளீகைக் கடுமான் பேக
யார்கொ லளிய டானே நெருநற்
சுர னுழந்து வருந்திய வொக்கல் பசித்தெனக்
குணில்பாய் முரசி னிரங்கு மருவி
நளியிருஞ் சிலம்பிற் சீறூ ராங்கண்
வாயிற் றோன்றி வாழ்த்தி நின்று
நின்னு நின் மலையும் பாட வின்னா

கொடையினையுமுடைய

விரைந்த குதிரையையுடைய பேக, அவ்வருத்தக்காள், யாரோதான் ? நெருநற்றுச்சுரத்தின்கண்ணே நடந்துவருந்திய எனதுசுற்றம் பசித்ததாக,கடிப்பு அறையப்பட்ட முரசுபோல ஒலிக்கப்பட்ட அருவியையுடைய பெரிய உயர் ந்தமலைக்கட் சிறிய ஊராகிய அவ்விடத்து வாயிற்கண்ணே வந்து தோன்றி வாழ்த்திநின்று நின்னையும் நின் மலையையும்பாட, அப்பொழுது இன்னாதாகச் சொரியப்பட்ட கண்ணீரை ஒழித்தலமாட்டாளாய் அக்கண்ணீர் முலையிடத்தை நனைப்பப் பொருமிக குழல இங்கியொலிப்பதுபோல அழுதாள், மிகவும்.—எ - று.

மழை வேண்டுங்காலத்துப் பெய்வித்தற்கும் வேண்டாக்காலத்து ஒழித்தற்கும் பலிதூஉய்ப்பேணிய குறவராகியமாக்களென்க.

குறவர்மாக்கள், இருபெயரொட்டுப்பண்புத்தொகை.

மாக்கள் புனத்தினை அயிலுநாட, பேக, என்னொக்கல்பசித்தென வாயிற்றோன்றி வாழ்த்திநின்று நின்னும்நின்மலையும்பாடக் குழல இனைவதுபோல அழுதாள் ; அவ்வளிக்கத்தக்காள் யார்கொல் ? அவளபால அருள்பண்ணத் தகுமெனவினைமுடிக்க.

இது, நின்மலையிற்குறவர்மாக்கள கடவுட்பேணி மழைவேண்டிய பொழுது பெற்றுத் தாம்வேண்டுமுணவு நுகருமாறுபோல் இவளும் நின் அருள்பெற்றுஇன்ப நுகர்வாளாகவேண்டுமென்பதொருநயந்தோன்றநின்றது.

மழைமிகப்பெய்தலானென்பது, ஆற்றலாற் கூறப்பட்டது.

---

கஈ. இகுத்தல - சொரிதல ; மலைபடு. உஉகூ.

கஈ - ச. "மைக்க ணீல வாலிசிந்த வைகிய தடத்து" நைடதம், கைக்கிளை, க.

மங்கைமென் முலைத்

கரு. "நெய்த லுண்கண் பைதல கூரப், பின்னிருங் கூந்தன்

மறை
யினள் பெரிதழிந, துதியன் மஞ்டிய வொலிதலை ஞாட்பி,னிம்மென் பெருங்களத் தியவ ரூது, மாம்பலங் குழலி னேங்கிக், கலங்களு ருநவோர் " (நற். ௧௧௩); "குழலேங்கு மாரேங்கி யழுதார் கோதை மடவாரே" (சீவக. உ௧௫௫); "வேய்ங்குழல விளிகொ ணல்யாழ வீணையென் றினையநாண வேங்கினள்" கம்ப. கிட்கிந்தா. அரசியல். ௩.



பேகனுற் றுறக்கப்பட்ட கண்ணகிகாரணமாக அவனோடுகூட்ட லுறுவார், அருள் பண்ணவேண்டுமென்று இரந்துகொண்டுகூறினமையின், குறுங்கலி யாயிற்று.

(௧௪௩)

---

(௧௪௪.) அருளா[1] யாகலோ கொடிதே யிருள்வரச்
சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்
காரெதிர் கானம் பாடினே மாக
நீனற வுணைதலிற் பொதிந்த வுண்கண்
கலுழ்ந்துவா ரரிப்பனி பூணக நனைப்ப
வினைத லானு ளாக வினையோய்
கிளையை மன்னெங் கேள்வெய் யோற்கென
யாந்தற் றொழுதனம் வினவக் காந்தண்
[2] முகைபுரை விரலிற் கண்ணீர் துடையா
யாமவன் கிளைஞரே மல்லேங் கேளினி

யெம்போ லொருத்தி நலனயந் தென்றும்
வருஉ மென்ப வயங்குபுகழ்ப் பேக
னொல்லென வொலிக்குந் தேரொடு
முல்லை வேலி நல்லூ ரானே.*

திணையும் துறையும் அவை.

அவனை அவள்காரணமாகப் [3] பாணர் பாடியது.

இ - ள்.—அருள்பண்ணுயாதல கொடிது;
மாலைக்காலம்வந்தவளவிலே சிறிய யாழை இரங்கற்பண்ணுகிய செவ்வழியென்னும்பண்ணிலே வாசிக்கும்

---

யே

க. ஆகமலென்னும் வினைக்குறிப்புச்சொல் சார்ந்துநின்ற சொற்பொருளை உணர்த்திநிற்றற்குமேற்கோள; தோல். இடை. ரு. ௩உ - ந.

உ. புறநா. கசகூ: ௩; கசஎ: உ.

௩. புறநா. கருச : ௩. மகரவீற்றுசசொல
முப்பெற்று நிற்றற்கும், (தோல். குற்றியலுகரப.

வேற்றுமைக்கண் அம்
ரு. எஅ - ந), செயவெ
னெச்சம் முற்றாயத்திரிவுழி ஆகவென்னும் இடைசசொலவந்து
அதன் பொருளையே உணர்த்திச செயவெனெச்சமாய் நிற்றற்கும் (தோல். இடை. ரு. ௩உ-ந) மேற்கோள்.

ம. செயவெனெச்சம் முற்றாய்த்திரிவுழி
ஆகவென்னும் இடைச்சொல

வந்து அதனை
பொருளையுணர்த்திசசெயவெனெசசமாய்நிற்றற்குமேற்கோள;
தோல். இடை. ரு. ௩உ - ந.

அ - ம. "செழுங்குலைக் காந்தள் கைவிரல் பூப்பவும்" சிறுபாண்.

கடீஎ.

*ழ. "அருளாயாகலோ.... நலபூராளே : இது கண்ணகி காரண

மாக வையாவிக்கோப்பெரும்பேகனைப் பரணர்பாடிய கைக்கிளை வகைப்

(...) 1 '...' 2 'மகைபுணர்' 3 'வன்பரணர்'

# புறநானூறு மூலமும் உரையும்.

உஉக

பரிசுபண்ணி நின்னது மழையையேற்றுக்கொண்ட காட்டைப்பாடினேமாக, நீலநறுநெய்தல்போன்றுபொலிந்த மையுண்டகண்கள் கலங்கிவீழ்ந்த இடைவிட்ட துளிகள் பூணையுடைய மார்பைநனைப்ப வருந்துதல அமையாளாக, இளையோய், 'இளமையையுடையையோ எம்முடையகேண்மையை விரும்புவோனுக்கு' என யாங்கள் தன்னை வணங்கிக்கேட்டேமாக, அவர் காந்தள் மொட்டுப்போலும் விரலாலே தன் கண்ணீரைத்துடைத்து காங்கள் அவனுடைய இளைஞரேமல்லேம் ; கேட்பாயாக, நீ இப்பொழுது ; எம்மை ஒப்பாளொருத்தியுடைய அழகைக்காதலித்து எக்காலும் வருமென்று பலரும்சொல்லுவரென்றுகூறினள் ; விளங்கிய புகழையுடைய பேகன், ஒலிமுழங்கும் கும்தேருடனே முலலைவேலியையுடைய நல்லூரின்கண்.—எ - று.

இளையையே யாவெனா ஒகாரமும் எம்முளென ஒருசொல்லும் வருவித்துரைக்கப்பட்டன.

நின்கானம் பாடினேமாக, இனைதலாளாக, யாம் தற்றொழுதனம் வினவ, தன்கண்ணீர் துடைத்துப் பேகன் ஒருத்திநலனயந்து நல்லூரின்கண் என்றும் வருமென்பவென்றாள் ; அவளை அருளாயாதல கொடிதெனக் கூட்டி வினைமுடிவுசெய்க.

எம்போலொருத்தியென்றது, உவமைகருதாது வன்மையுரைதோன்ற நின்றது; எம்மைப்போலும் பொதுமகளொருத்தியென அவனை இழித்துக் கூறியவாறுமாம்.

இனி,
லால் அவ...

யாம் தற்றொழுதனம்வினவினேமாக, அவனாயத்தார் தம்விர
கண்ணிரைத்துடைத்து யாம் அவன்கிளைஞரல்லேம்; இது பு

குந்தவாறு யாம் கூறக்கேளாமுன் புகூறிப் பின் பேகன் எம்போலொருத்தி நலம் நயந்து நல்லூரின்கட்சென்று வருமென்றுசொன்னார்கள்; இவ்வாறு இளையோரும் ஆயத்தாரும் உறம் தன்புகழ்வுரைத்து அருளாயாதல தெனவுரைப்பினுமமையும்.

கொடி

(கசச)

---

பாடாண்பாட்டு; இளையை யன்மெனக் கோவெய யோற்கெனை வினவ, யாம் இளையமல்லேம்; முலையவேயிகவணுர்க்கணனே வருமென்று சொல்லுவ ரெனக்கூறுதலின், அஃது ஏனைக்கைக்கிளைகளின் வேறாயிற்று" தொல். புறத்திணை. சூ. ௩௫ - ந.

---

(கசரு.) மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅ மீத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக
பசித்தும் வாரேம் பாரமு மிலமே
ரு களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்

---

க - ௩. புறநா. கசக : கo - கஉ.

ரு. மூ. புறநா. சுஉஎ : க; "மருதம் பண்ணிய கருங்கோட்டுச மலைபடு. ருகூச.



ஐயம்புரிந் துறையுநர் நடுங்கப் பண்ணி
யறஞ்செய் தீமோ வருள்வெய் யோயென
விஃதியா மிரந்த பரிசிலஃ திருளி
னினமணி நெடுந்தே ரேறி
௧௦ யின்னா துறைவி யரும்படர் களைமே.

திணையும் துறையும் அவை.

அவனை அவள் காரணமாக அவர்பாடியது.

இ - ள்.—மெல்லிய தகைமையையுடைய கரிய மயில குளிராலநடுங்கு மென்று அருளசெய்து படாய்கொடுத்த அழியாத நல்லபுகழினையுடைய மதம்பட்டயானையையும் மனஞ்செருக்கிய குதிரையையுமுடைய பேக, யாம் பசித்தும்வாருவேமலலேம்; எம்மாற்பரிக்கப்படுஞ்சுற்றமுமுடையேயலலேம்; களாப்பழம்போன்ற கரியகோட டையுடைய சிறிய யாழை இசையின்பத்தை விரும்பியுறைவார் அவ்விசையின்பத்தால தலையசைத்துக கொணடாடும்படி வாசித்து, அறத்தைசசெய்வாயாக அருளைவிரும்புவோயென இது, நின்பால யாம் இரந்தபரிசில்; இற்றையிரவின்கண இனமாகிய மணியையுடைய உயர்ந்ததேரையேறிப்போய்க காண்டற்கு இன்னாதாக உறைகின்றவள பொறுத்தற்கரிய நினைவாலுணடாகிய நோயைத் தீர்ப்பாயாக.—எ - று.

பேக, தேரேறி இன்னாதுறைவி அரும்படர் களை; யாழைப்பண்ணியாம் இரந்தபரிசில இதுவெனக்கூட்டுக.

இதுவென்றது, அப்படிப் படர் களைதலை.

'மடத்தகை மாமயில பனிகுமென் றருளிப், படாஅ மீத்த......பேக' என்ற கருத்து: இவ்வாறு ஒருகாரணமின்றியும் அருளபணணுகின்ற நீ நின்னால வருந்துகின்ற இவட்கு அருளாதொழிதல தகாதென்பதாம்.

இனி, 'அருள்வெய்யோய், யாமிரந்தபரிசில, அறஞ்செய்யவேண்டு மென்று கூறுமிது; அவ்வறந்தான் யாதென்றுகேட்பின், நின்பால அருளா பெருமையின் இன்னாதுறைதவி அரும்படரை நீசென்று களைதல; அதனைச் செய்வாயாகவெனக் கூட்டியுரைப்பினுமமையும்.

'பனிக்குமென் றஞ்சி' என்பதூஉம் பாடம்.

(கசரு)

---

கo. முன்னிலைமுன்னர் ஏகாரம் அந்நிலைமரபின் மெய்யூர்ந்துவருதற்கு மேற்கோள்; தொல். எச்ச. சூ. ருஉ - பேர்.

● "பண்வனப்புக், கேட்டார் நன்றென்றல்" (சிறுபஞ்ச. கூ); "இசை பெறு திருவின் வேத்தவை" (மலைபடு. நகூ),'இசையை எக்காலத்தும் கேட்கின்ற செல்வத்தினையுடைய அரசர்களுடைய அவைக்களம்' (ஷை உரை) என்பவை இங்கே அறியத்பாலன.

---

# புறநானூறு மூலமும் உரையும்.

உ௩௧

(கசசு.) அன்ன வாகநின் னருங்கல வெறுக்கை
யவைபெறல் வேண்டே மடுபோர்ப் பேக
சீறியாழ் செவ்வழி பண்ணிநின் வன்புல
நன்னாடு பாட வென்னை நயந்து

பரிசி னல்குவை யாயிற் குரிசினீ
1 நல்கா மையி னைவரச் சாஅ
யருந்துய ருழக்குநின் றிருந்திழை யரிவை
கலிமயிற் கலாவங் கால்குவித் தன்ன
வொலிமென் கூந்தற் கமழ்புகை கொளீஇத்
தண்கமழ் கோதை புனைய
வண்பரி நெடுந்தேர் பூண்கநின் மாவே.

திணையும் துறையும் அவை.

அவனை அவள்காரணமாக அரிசில்கிழார்பாடியது.

இ - ள்.—அத்தன்மையவாக; நின்னலதாபபடட பெறுதற்கரிய ஆப ரணமும செலவமுமாகிய அவைபெறுதலைவிரும்பேம்; கொலலும்போரை யுடைய பேக,சிறியயான முச செவ்வழியாகப்பணணி வாசித்த நினது வலிய நிலமாகிய நலல மலைநாடடைடபாட, எனனைககாதலித்துப் பரிசிலதருகுவை யாயின், தலைவனே, நீ அருளாமையாற கணடாரிரஙக மெலிநது அரிய துய ரத்தானவருநதும் உனனுடைய திருநதிய அணிபையுடைய அரிவையது தழைத்த மயிலினதுபீலியைக காலொனறகுவிததாறபோன்ற தழைத்த மெலலியகூநதறகணணே மணஙகமழும புகையைககொளளுவித்துக் குளிர் நத மணஙகமழும் மாலையைசசூட வளவிய செலவையுடைய உயர்நத தேரை நினகுதிரைகள பூணபனவாக,—எ - று.

அனனவாகவெனறது, இரவலாககு அருங்கலவெறுக்கைகளை எளிதிற் கொடுபபையனறே?அவ்வெறுககை எமககும் எளிதாகவென்றவாறும்.(கசரு)

---

க - உ. "அரும்பொருட டரிசிலே னலலேன்" சிலப். உஅ : களக.

ரு. புறநா. கசச : உ; கசஎ : உ.

எ. துயருழத்தல : மணி. பதி : சஅ.

அ - கூ. " கலிமயிற் கலாவத தனனவிவ, ளொலிமென கூநத

துரிய வாம்" குறுந். உ௨௫.

கூ - கo. புறநா. கசள : சு - அ; "பெறுகநின
வருந்தா, னறுமலர்க் கூந்த லணி பெறுகென" சிலப்.

செவ்வி பெருமகன்
உஎ : உகரு - சு.

எ - கக. "மாணிழை யரிவை காவலிய வொருநாட், பூணக
மாளிகைப் புரவி நெடுநேதேர்" பதிற். அக : ௩க - உ.

(பி - ம்.)—1 'கலகாமையினீவரச'

---



(கசஎ.) [1] கன்முழை யருவிப் பன்மலை நீந்திச்
சீறியாழ் செவ்வழி பண்ணி வந்ததைக்
கார்வா னின்னுறை தமியள் கேளா
நெருந லொருசிறைப் புலம்புகொண் டுறையு
ரு மரிமதர் மழைக்க ணம்மா வரிவை
நெய்யொடு துறந்த மையிருங் கூந்தல்
மண்ணுறு மணியின் மாசற மண்ணிப்
புதுமலர் கஞல வின்று பெயரி
னதுமனெம் பரிசி லாவியர் கோவே.*

திணையும் துறையும் அவை.

அவள்காரணமாக அவனைப் பெருங்குன்றூர்கிழார் பாடியது.

இ - ள்.—கல்முழைக்கணின்றும் விழும் அருவியையுடைய பலமலைகளை அரிதிற்கழித்துச் சிறியயாழைச் செவ்வழியென்னும்பண்ணை வாசிக்கும்படியாகப் பண்ணி வாசித்துவாநததற்குக் கார்காலத்துமழையினது இனியதுளி

வீழ்கின்ற ஓசையைத் தமியளாகக்கேட்டு நெருநற்று ஒருபக்கத்துத் தனிமை கொண்டிருந்த அரிபரந்த மதர்த்த குளிர்ச்சியையுடைய கண்ணினையும் அழ கியமாமைநிறத்தினையுமுடைய அந்த அரிவையது செய்யாற்றுறக்கப்பட்ட மைபோலும் கரியமயிரை ஒப்பிடப்பட்ட நீலமணியினும் மாசறக்கழுவிச செவ்விமலர்நெருங்கும்பரிசு இன்று வருவையாயின், அதுவாகும், எம்முடையபரிசில் ; ஆவியருடையவேந்தே.—எ - று.

உறை - துளி; என்பது ஆகுபெயரால துளியினோசையை.மன், அசை.

சீறியாழ் செவ்வழிபண்ணிவந்ததற்கு அரிவைகூந்தல புதுமலர் கஞலும் படி அவன்பால் எள்ளுடும்வரின் எம்பரிசில அதுவெனக்கூட்டுக.

செய்பூசுதலோடு பேணுதலைத்துறந்தவெனியுமமையும்.

செவ்வழிபண்ணிவநதது, புதுமலர்கஞலவென்று

இயைத்துரைப்பாருமுளர்.

(கசஎ)

---

உ. புறநா. கசச : உ ; கசசு : ௩.

௩. "முடங்கிறைச சொரிதரு மாத்திர ளருவி, யின்ப விமிழிசை யோர்ப்பவள்" மலை. அஎ - அ.

ரு - எ. பரி. கo: அகூ. "மணியேசுமிருங்கூந்தல்" கலி. எஎ.

அ. புறநா. கசச: ௩. கூ - அ புறநா. கசசு : கூ - கo.

கூ."ஆவியர் பெருமகன் பெருங்க ணுடன பேகனும்" சிறுபாண். அகூ-எ. அ - கூ. "புதுமலர்....கோவே : இதனுள் மன்னென்பது ஆமென்பது குறித்து நின்றது" (தொல். இடை. சூ. ச - பேர் ; ந); மன்னென்பது பெயர்ச்சொல்லை அடுத்து வந்ததற்கு மேற்கோள் ; நன்-மயிலை. சூ. சகசு.

* மு. கைக்கிளைவகைப் பாடாண்பாட்டிற்கு மேற்கோள் ; புறத்திணை. சூ. ௩௫ - ந.

(கசஅ.) கறங்குமிசை யருவிய பிறங்குமலை நள்ளிநின்
னசைவி லுழைப்பி னசைவள னேத்தி
நாடொறு நன்கலங் களிற்றொடு கொணர்ந்து
கூடுவிளங்கு வியனகர்ப் பரிசின்முற் றளிப்பப்
௫ பீடின் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்
செய்யா கூறிக் கிளத்த
லெய்யா தாகின்றெஞ் சிறுசெந் நாவே.

திணை - பாடாண்டிணை ; துறை - பரிசிற்றுறை.

1 கண்டீரக்கோப் பெருநள்ளியை வன்பரணர் பாடியது.

இ - ள்.—உச்சிக்கணின்றும் ஆலித்து இழிதரும் அருவியினையுடைய உயர்ந்த மலையையுடைய நள்ளி, நினது தளர்ச்சியில்லாத வலியமுயற்சியால் யாவரும் நச்சப்படும் செல்வத்தை வாழ்த்தி நாடோறும் நல்ல அணிகலத்தைக் களிற்றோடே கொண்டுவந்து நெற்கூடுவிளங்கும் அகலியநகரிடத்துக் கணிருந்த பரிசிலர்க்கு அளித்துவிடுத்தலால், பிறர்கண் பெரும்பெருமையில்லாத அரசரைப்புகழும்புகழ்ச்சியைவிரும்பி அவ்வரசர்செய்யாதனவற்றைச்சொல்லி அவர்குணங்களைக் கூறுதலை அறியாததாயிற்று, எம்முடைய சிறிய செவ்விய நா.—எ - று.

பொய்கூறாமையிற் 'செந்நா' என்றார் ; தற்புகழ்ந்தாராகாமற் 'சிறுசெந்நா' என்றார்.

அருவியவென்பது, விகாரம்.

நள்ளி, நீ பரிசின்முற்றளித்தலான், எம் சிறுசெந்நா நின்

நசைவளனேத்தி மன்னனைப்புகழ்ச்சிவேண்டிக் கிளத்தல
எய்யாதாகின்றெனக் கூட்டுக.

பின்னசைவளன் ஏத்திக் கொணர்ந்து முற்றளித்தலாலெனப் பரிசிலர் மேலேற்றி உரைப்பினுமமையும்.

(கசஅ)

---

க. புறநா. கருஅ: ௩. "களிமலை நாடன் வளியும்" சிறுபாண். க0எ.

உ. புறநா. ககஉ : கச - ரு ; "மடியிலான் செலவம்போல் மரனந்த" (கலி. ௩ரு); "ஆக்க மதர்வினுய்ச செல்லு மசைவிலா, வூக்க முடையா னுழை" (குறள், ருகச); புறநா. உச : உகூ-ஆம் அடியையும் அதனுரையையும் பார்க்க.

௩ - ௪. புறநா. கசஅ : உ - ௪ ; கரு௩ : அ - கூ.

(பி - ம்.)—1 'கண்டிரக்கோபெருநற்கிள்ளி'

---



(கசகூ,) நள்ளி வாழியோ நள்ளி நள்ளென்
மாலை மருதம் பண்ணிக் காலைக்
கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி
வரவெமர் மறந்தன ரதுநீ
புரவுக்கடன் பூண்ட வண்மை யானே.

திணை - அது ; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—நள்ளி, வாழ்வாயாக; நாளி, நள்ளென்னும் யுடைய மாலைப்பொழுதின்கண்ணே மருதமொழிகின்றபண்ணை

ஓசையை
வாசித்தக
காலைப்பொழுதின்கண் கைவழியாகிய யாழின்கட
செவ்வழியென்னும் பண்ணைவாசித்து வாலாற்றமுலமைையை
எம்முடைய பாணர்சாதியிலுளோர் மறந்தார்; அவ்வாறு மறந்தது, நீ கொடுத்து ஓம்புதலைக் கடனாக மேற்கொண்டவண்மையான்.—எ - று.

கையகத்து எப்பொழுதும் இருத்தலான், யாழைக் கைவழியென்றார், ஆகுபெயரான்.

'வாவவர் மறந்தனர்' என்பதூஉம் பாடம்.

(கசக)

---

உ - ரை.* மாலையிற் செவ்வழிப்பணணும் காலையில் மருதப்பண்ணும் வாசிக்க வேண்டுமென்பது இசைமரபு; இதனை, "திவவுமெய்ந் நிறுத்துச் செவ்வழி பண்ணி", "யாமோர் மருதம் பணண" (மதுரை. ருOச, ருருஅ) என மாலைக்கும் காலைக்கும் உரியனவாக அப்பண்கள் கூறப்பெற்றிருத்தலாலும் அறிக.

உ - ரு. புறநா. கருரு: எ - கஉ.

---

(கருO.) கூதிர்ப் பருந்தி னிருஞ்சிற கன்ன
பாறிய சிதாரேன் பலவுமுதற் பொருந்தித்
தன்னு முள்ளேன் பிறிதுபுலம் படர்ந்தவென்
னுயங்குபடர் வருத்தமு முலைவு நோக்கி
ரு மான்கணந் தொலைச்சிய குருதியங் கழற்கால்

வான்கதிர்த் திருமணி விளங்குஞ் சென்னிச்

க - உ. "நீர்ப்படு பருநதி யிருஞ்சிற கன்ய, நிலந்தின் சிதாஅர்" பதிற். கஉ: கக - உ0.

சு. "முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி, மின்னுற ழிமைப் பித் சென்னிப் பொற்ப" புநாகு. அச : ரு.



உ௲ரு

செல்வத் தோன்றலோர் வல்வில் வேட்டுவன்
றொழுதன னெழுவேற் கைகவித் திரீஇ
யிழுதி னன்ன வானிணக் கொழுங்குறை
கானதர் மயங்கிய விளையர் வல்லே
தாம்வந் தெய்தா வளவை யொய்யெனத்
தான்ஞெலி தீயின் [1] விரைவனன் சுட்டுநின்
னிரும்பே ரொக்கலொடு தின்மெனத் தருதலி
னமிழ்தின் மிசைந்து காய்பசி நீங்கி
நன்மர னளிய நறுந்தண் சாரற்
[2] கன்மிசை யருவி தண்ணெனப் பருகி
விடுத்த றொடங்கினே னாக வல்லே
பெறுதற் கரிய வீறுசா னன்கலம்
பிறிதொன் றில்லைக் காட்டுநாட் டேமென
(மார்பிற் பூண்ட வயங்குகாழார
மடைசெறி முன்கைக் கடகமொ டீத்தன)
னெந்நா டோவென நாடுஞ் சொல்லான்
யாரீ ரோவெனப் [3] பேருஞ் சொல்லான்
பிறர்பிறர் கூற வழிக்கேட் டிசினே

௨௫ விரும்புவினைந் தியற்றப் பெரும்பெயர்த் தோட்டி
யம்மலை காக்கு மணிநெடுங் குன்றிற்
பளிங்குவகுத் தன்ன தீநீர்
நளிமலை நாட னள்ளியவ னெனவே.

திணை - அது ; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—கூதிர்க்காலத்துப் பருந்தினது கரிய சிறகையொத்த துணியாகிய சீரையையுடையேனாய்ப் பலாவடியைப்பொருந்தி, தன்னையுநினையேனாய வேற்றுநாட்டிடத்தே சென்றதனால் ஏய்ந்த செலவாலுளதாகிய வருத்தத்தினையும் மிடியையும்பார்த்து மானினது நிரைத்தொலைத்த, குருதி தோய்ந்த அழகிய வீரக்கழலினையுடைய காலினையும் வலிய ஒளியையுடைய அழகிய நீலமணிவிளங்கும் உச்சியையுமுடைய செல்வத்தையுடைய தலைவனாகிய ஒரு வலியவில்லினையுடைய வேட்டுவன், தன்னை அஞ்சலிபண்ணினேனாய் எழுந்திருப்பேனாக கைகவித்து இருத்தி நெய்யிழுதுபோன்ற வெள்ளிய நிணத்தையுடைய கொழுவியதடியைக் காட்டுவழியிடைக்கண் வழிமயங்கிப் போகிய இளையர்தாம் விரைய வந்து பொருந்துவதற்குமுன்னே கடிதாகத் தான்கடைந்த தீயான் விரைந்துசுட்டு நீரது மிகப்பெரிய சுற்றத்துடனே தின்மினென்றுதருதலான் அதனை யாங்கள் அமிழ்துபோலத்தின்று சுடுகின்ற பசிதீர்ந்ததாக, நல்ல மரச்செறிவையுடைய நறிய குளிர்ந்த மலைச்சாரற்கண் மலையுச்சியினின்றும் வீழ்ந்த அருவிநீரைக் குளிரக்குடித்து விடைகொள்ளத்தொடங்கினேனாக, விரையவந்து பெறுதற்கரிய

பெருமையமைந்த நல்ல அ[illegible]கலங்களை தருதற்குவேறொன்றிலலே,யாம் காட்டுநாட்டின்கண்ணே மௌனச்சொலலித் தமது மார்பிற்பூணப்பட்ட விளங்கிய முத்துவடங்களை யுடைய ஆரத்தைக் கொளுத்துச செறிந்த மு[illegible] [illegible]கக்கணிந்த கடகத்துடனே தந்தனன் ; நும்முடையநாடு எ[illegible]நாடோவென்று கேட்ப நாடும் சொலலிற் றிலன் ; நீர் யாரெனக்கேட்பப் பெயரும் சொலலிற்றிலன் ; அவனுடும் பெய ரும் பிறர்பிறர் வழியின்கண்ணே சொலலக்கேட்டேன்யான் புனைந்து செய்யப்படாத மிக்க புக[illegible] ழயுடைய தோட்டியாகிய

; இரும்பாற்
அம்மலையைக்
காக்கும், அழகிய பெரிய பக்கமலையினையும் பலவிலை வருந்தாற்போன்ற வெளியநிறத்தையுடைய இனியநீரையுமுடைய பெரிய மலைநாட்டையுடைய நள்ளி அவனெனை.—எ - று.

நீக்கி, நீங்க.

பலவுமுதற்பொருந்தித் தொழுதனனெனவும், மலைகாக்கும் நள்ளியென வுமியையும்.

அவன் நள்ளியெனப் பிறர்பிறர்கூற வழிகேட்டி[illegible]னெனக்கூட்டுக.
()

உஎ. புறநா. கஎ : கக.

உஅ. "நளிமலை நாட வள்ளியும்" (சிறுபாண். கoஎ) ; 'நளி' என்னும் உரிசசொல பெருமையையுணர்த்தியதற்கு மேற்கோள் ; தொல். உரி. சூ. உச - சே ; [illegible] உரு - பேர்; [illegible] உஉ-ந; இ -வி. சூ. உஅச - உரை.

(கருக.) பண்டும் பண்டும் பாடுந ருவப்ப
விண்டோய் சிமைய விறல்வரைக் கவாஅற்
கிழவன் சேட்புலம் படரி னிழையணிந்து
புன்றலை மடப்பிடி பரிசி லாகப்
பெண்டிருந் தம்பதங் கொடுக்கும் வண்புகழ்க்
கண்டீ ரக்கோ னாகலி னன்று
முயங்க லான்றிசின் யானே பொலந்தேர்
நன்னன் மருக னன்றியு நீயு
முயங்கற் கொத்தனை மன்னே வயங்குமொழிப்
பாடுநர்க் கடைத்த கதவி னாடுமழை
யணங்குசா லடுக்கம் பொழியுநும்
மணங்கமழ் மால்வரை வரைந்தன ரெமரே.

திணையும் துறையும் அவை.

இளங்கண்டீரக்கோவும் [1] இளவிச்சிக்கோவும் ஒருங்கிருந்தவழிச் சென்ற பெருந்தலைச்சாத்தனார் இளங்கண்டீரக்கோவைப் புல்லி இளவிச்சிக்கோவைப் புல்லாராக, என்னை என்னைப் புல்லீராயினீரென அவர் பாடியது.

---

உ. "மாபோர் [illegible]" (நற். [illegible]); "மழை யாடு சிமைய மால்வரைக் கவாஅன்" பட்டினப். [illegible].

[illegible]. இழை - ஒருவரால் இழைக்கப் பட்ட அணிகலன்கள்; தொல். களவு. [illegible]. ச - ந.

[illegible]. "இரும்பிடிப் பரிசிலர் போல" (அகநா. கக); "பிடிக்கவளஞ் சிதறும் பெயல்மழைத் தடக்கை" சிறுபாண். [illegible].

ரு. "உரைப்பார் உரைப்பவை யெல்லாம் இரப்பார்க்கொன்று, ஈவார்மே னிற்கும் புகழ்" குறள். [illegible].

எ. இசின்: புறநா. கஉ0: உச - ஆம் அடிக்குறிப்பைப் பார்க்க.

விசேடித்தது நிற்கின்ற தன்மையை உணர்த்துதற்குவரும் ஆகிய என்றும் வாசகம் தொக்குநின்றதென்றே கோடும்'' (பேரு. பெரு. நு. கக-ந); "கேழற் பன்றி...கேழற்பன்றி முதலாயினவும் சாதிதொகை பண்புடைமையின் ஈண்டு வேண்டினரென்க'', "பூமலர், பூம்போது, களிறுரு ருத்தல, கேழற்பன்றி



தாழற் புற்றத் துடும்பிற் செற்றும்
வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்
புகழ்சால் சிறப்பி னம்புமிகத் திளைக்குங்
கொலைவன் யார்கொலோ கொலைவன் மற்றிவன்
விலைவன் போலான் வெறுக்கைநன் குடைய
னாரந் தாழ்ந்த வம்பகட்டு மார்பிற்
சார லருவிப் பயமலைக் கிழவ
னோரி கொல்லோ வல்லன் கொல்லோ
பாடுவல் விறலியோர் வண்ண நீரு
மண்முழா வமைமின் பண்யாழ் நிறுமின்
கண்விடு தூம்பிற் களிற்றுயிர் தொடுமின்

அயன்றதற்றொடக்கத்த வோவெனின்,......சேழலென்பது எய்ப்பன்றி முதலாயவற்றை நீக்குதலானும் பொருளை வேறுபாடுடைமயின ஒருபொருட் பன்மொழியாகா; பண்புத்தொகையு ளடங்குமெனக'' நன்-மயிலை. பு. அஅ, நடஎ.

௩ - ௪. உரற்றலைக்கேழற்பன்றி: "உரற்றலை புருவப் பன்றி யிடம்வலம் திரிய'' சீவக. ௨௦.

கோவெனப் பெயரிய காலை யாங்கது
தன்பெய ராகலி னாணி மற்றியா
னாட்டிட னாட்டிடன் வருது மீங்கோர்
வேட்டுவ ரில்லை நின்னொப் போரென
வேட்டது மொழியவும் விடாஅன் வேட்டத்திற்
றானுயிர் செகுத்த மானிணப் புழுக்கோ
டானுருக் கன்ன வேரியை நல்கித்
தன்மலைப் பிறந்த தாவி னன்பொன்
பன்மணிக் குவையொடும் விரைஇக் கொண்மெனச்
சுரத்திடை நல்கி யோனே விடர்ச்சிமை
யோங்கிருங் கொல்லிப் பொருந
னோம்பா

ஈகை விறல்வெய் யோனே.*

---

கஎ. "கொடிதரு பாணிய பதலையும்" (மலைபடு. கக) என்பதும், 'மாத்திரையைச் சொல்லுந் தாளத்தையுடைய ஒருகண்மாக்கிணையும்' என்னு மதனுரையும் ஈண்டு அறியற்பாலன.

கசு - அ. மலைபடு. உ - கக.

உ0. "துறைபல முற்றிய" (மலைபடு. சு0) என்பதனுரையைப்பார்க்க.

உஉ. ஆகவென்னும் வினைக்குறிப்புசசொல் சார்ந்துநின்ற சொற்பொருளையே உணர்த்தி நிற்றற்கு மேற்கோள் ; தொல். இடை. ரு. ஈஉ-ந.

உக - உ. புறநா. கரு0: உஉ - ஈ;"சான்றோர், புகழுமுன்னர் நாணுப, பழியாங் கொல்பவோ காணுங் காலே" (குறுந். உருஉ) ; "தம்புகழ் கேட்டார்போற் றலைசாய்த்து மரநந்துஞ்ச" (கலி. ககக) ; "பிறர்தன்னைப்

பேணுக்கா ஞணலும்'' திரி. கூ.

உரு. புறநா. ௩௩௩: உக; "ஒன்றியான் பெட்டா வளவை யின்'' (பொருந. எ௩) ; "நீசில மொழியா வளவை'' சிறுபாண். உ௩௫.

· உஅ. "தாலி னன்பொன் றைஇய பாவை'' அகநா. உ௬உ.

௩௧-உ. கொல்லிமலை ழரிக்குரியதென்பது, "கொல்லி யாண்ட வல்வி லோரி'' (புறநா. கரு௮: ௫),"ஓரி, பல்பழப் பலவின் பயங்கெழு கொல்லி'', "வல்வி, லோரிக் கொன்று சேரலற் கீத்த, செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி'' (அகநா. உ0௮, உ0௯) என்பவற்றாலும் விளங்கும்.

* ௰. "வேழம் வீழத்த விழுத்தொடைப்பகழியென்னும் புறப்பாட்டு, இடைநிலத்திற்பரிசுபெற்றமை கண்டார்க்குக்கூறியது'' தொல். புறத்திணை. சூ. ௩௬-௩.

# புறநானூறு மூலமும் உரையும்

## உ0௪

திணை - அது ; துறை - பரிசில்விடை.
வல்விலோரியை வன்பரணர் பாடியது.

இ - ள்,—ஆனையைக் கொன்றுவீழ்த்த சிறந்த

தொடையையுடைய
அம்பு, பெரியவாயையுடைய புலியை இறந்துபாட்டையுறுவித்துத் துளை பொருந்திய கோட்டையுடைத்தாகிய தலையினையுடைய புள்ளிமான்கலையை யுருட்டி உரல்போலும் தலையையுடைய கேழலாகிய பன்றியைவீழச்செய்து அதற்கு அயலதாகிய ஆழ்தலையுடைய புற்றின்கட் கிடக்கின்ற உடும்பின்கட் சென்றுசெறியும் வல்வில்லாலுண்டாகிய வேட்டத்தை வென்றிப்படுத்தியிருந் தவன், புகழமைந்த சிறப்பினையுடைய அம்புஏத்தொழிலிலேமிகச் சென்றுறு தற்குக்காரணமாகிய கொலைவன் யாரோதான்? கொலைவன் மற்றிவன், விலை ஏதுவாகக் கொன்றானாகமாட்டான்; செல்வத்தை மிகவுடையனாயிருந்தான்; சந்தனம்பூசிப்புலர்த்திய அழகிய பரந்தமார்பினையுடைய, சாரற்கண்ணே அருவியையுடைய பயன்படுமலைக்குத் தலைவனாகிய ஓரியோ அல்லனோதான்? அவனாகத்தகும்; யான்பாடுவேன், விறலி, ஒருவண்ணம்; நீங்களும் முழவின் கண்ணே மார்ச்சனையையிடுமின்; யாழிலே பண்ணைநிறுத்துமின்; கண் திறக்கப்பட்ட தூம்பாகிய களிற்றினதுகைபோலும் வடிவையுடைய பெருவங்கியத்தை இசையுங்கோள்; சல்லியை வாசியுமின்; சிறுபறையை அறையுங்கோள்; பதலையில் ஒருமுகத்தை மெல்லெனக்கொட்டுமின்; நமது * பிறப்புணர்த்தும் கரியகோலைக் கையின்கண்ணே தாருங்கோளென்று சொல்லி அனுகித்தலைவனதலாலே இருபத்தொரு பாடற்றுறையையும் முறையாற்பாடிமுடித்துப் பின்னர்க்கோவேயென்று அவன்பெயர்கூறியகாலத்து அவ்விடத்து அவ்வார்த்தை தன்பெயராதலால் நாணி, பின்னை யாங்கள் நாட்டிடந்தோறும் நாட்டிடந்தோறும் சென்றுவருவேம்; இவ்விடத்து ஒரு வேட்டுவரில்லை, நின்னை ஒப்போரெனை யாம்விரும்பியதுகூறவும் அதற்குக் காலந்தாராய் வேட்டையின்கண் தானெய்தமானினது பிணத்தையுடைய தசையினது புழுக்குடனே ஆவின் நெய்யை உருக்கினாற்போன்ற மதுவைத் தந்து தன்னுடைய மலையின்கட்பிறந்த வலியிலலாத நல்லபொன்னைப் பல மணித்திரளுடனேகலந்து இதனைக் கொண்மினெனச்சொலலிச் சுரத்திடத்தே எமக்குத்தந்தான்; முழையையுடைத்தாகிய உச்சியையுடைய உயர்ந்த பெரிய கொல்லிக்குத்தலைவன், பாதுகாவாத வண்மையினையுடைய வென்றியைவிரும்புவோன்.—எ - று.

புழலென்றது ஆகுபெயராற் புழலையுடையகோட்டை.

களிற்றுயிரென்றது, ஆகுபெயராற் களிற்றினது கைபோலும்

வடிவை யுடைய பெருவங்கியத்தை.

பாடுவல்விறலியோர்வண்ணமென்றது, நீயும் ஒன்றுபாடுவாயாகவென் னுநினைவிற்று.

நீருமென்றது, கூட்டத்தை.

† மூவேழ்துறையுமென்றது, வலிவு மெலிவு சமமென்னும் மூன்றுதானத்

* 'நுண்கோல் - பிறப்புணர்த்துக்கோல' பதிற். ௬௬: உ௭ - உரை.

† "ஏழேயேழே நாலேமூன் றியலிசை யிசையியல்பா வஞ்சத்தேய் வின்றிக்கே மனங்கொளப் பயிற்றுவோர்" (தேவாரம், திருத்தாளச்சதி),





திலும் ஒவ்வொன்றில் ஏழுதானமுடித்துப்பாடும் பாடற்றுறையை ; இருபத்தொருகரம்பாற்றொடுக்கப்படும் பேரியாழெனினுமமையும். அன்றி,

தம்மினென்றது, தமியனைக் குறைநந்துநின்றது.

கொலலிப்பொருநனுகிய விறல்வெய்யோன் கோவெனப் பெயரியகாலே, அது தன்பெயராகலின் நாணி வேட்டமொழியவும்விடானுய் நல்கியோனெனக் கூட்டுக. (க௫உ)

"பண்களுக்கு இன்றியமையாத மூவேழ்திறம்" (சிலப். ரு: ௩௫ - ௭ அடியார்) என்பனவும் ஈண்டறியத்தக்கன.

---

(க௫௩.) மழையணி குன்றத்துக் கிழவ னாளு
மிழையணி யானை யிரப்போர்க் கீயுஞ்

சுடர்விடு பசும்பூட் சூர்ப்பமை முன்கை
யடுபோ ராஅ வாத ஞோரி
மாரி வண்கொடை காணிய நன்றுஞ்
சென்றது மன்னெங் கண்ணுளங் கடும்பே
பனிநீர்ப் பூவா மணிமிடை குவளை
வாணூர்த் தொடுத்த கண்ணியுங் கலனும்
யானை யினத்தொடு பெற்றனர் நீங்கிப்
பசியா ராகன் மாறுகொல் விசிபிணிக்
கூடுகொ ளின்னியங் கறங்க
வாடலு மொல்லார்தம் பாடலு மறந்தே.

திணை - அது ; துறை - இயன்மொழி.

அவனை அவர் பாடியது.

இ - ள்.—முகிலுழுநுகத மலைக்குத்தலைவன், நாடோறும் பட்டமுதலா கியபூண்களையணிந்த யானையை இரப்போர்க்குக்கொடுக்கும் கதிர்விடுகின்ற பசும்பொன்னாற்செய்த அணியினையும் வளைந்த கடகமமைந்த முன்கையினையு முடைய கொலலும்போர் அமையாத ஆதனோரியது மழைபோலும் வள்ளிய கொடையைக்காண்டற்கு மிகவும்சென்றது, எம்முடையகூத்தச்சுற்றம்; அச்

---

உ. புறநா. கருக: ங - சு.

ங. சூர்ப்பு - வளைவு ; ஆகுபெயராக கடகத்திற்காயிற்று ; "சூர்ப்பு கோல்வளை செறிந்த முன்கை" அகநா. கசஉ.

ரு. கஙங: ச - எ.

எ. புறநா. ஙகூச: உ - ங.

அ - கூ. புறநா. கசஅ : ங - ச.

(பி - ம்.)—1 'சூடி' 2 'நடுக்குமணிகளையார்காரிபருகி', 'நடுக்குமணிகளை யாகாளரிபருகி' 3 'பனிக்கசாஅய்' 4 'நாடனைச்' 5 'செய்குவமமரெனக்', 'செய் குவனமரெனக்' 6 'புன்மயிருகுத்தலுஞ் செய்யான் வண்மான்', 'புன்மையிற்', 7 'பண்மாண்'



வலம்படு 1 முரசின் வெல்போர் 2 வேந்த
னிலங்கிரும் பாசறை நடுங்கின்
றிரண்டா காதவன் கூறிய தெனவே.

திணையும் துறையும் அவை.

அரிசில்கிழார்.

(கூ0ச)

க. வலம்படுமுரசு - வெற்றியுண்டாதற்குக் காரணமாகிய முரசு; "வலம் படுவியன்பணை" (பதிற். கஎ: ரு) என்பதும், 'போர்செய்து வருந்தாமற் பகைவர் வெருவியோட முழங்கி அரசனுக்கு வென்றி தன்பாலேபடநின்ற முரசம்' என்னுமதன் உரையும் ஈண்டு அறியற்பாலன.

கக. கூறியது - சபதம்; வஞ்சினம் கூறுதல் ஒன்றுமொழிதலென்று கூறப்படுதலும், "வைத்தவஞ்சினம் வாய்ப்பவென்று" (பதிற். க - பதி) என்பதும் 'இரண்டாகாதவன் கூறியது' என்பது சபதமென்று பொருள்படு தலை வலியுறுத்தும்.

க - கக. அவன் கூறியது இரண்டாகாதென்று அரசனது பெரியபாசறை நடுங்கியது.

(பி - ம்.)—1 'முரசிலவெல' 2 'வேநதரிலங்கிரும்'

---

(கூ0ரு.) வயலைக் கொடியின் வாடிய 1 மருங்கு

ஹுயவ ஹூர்திப் பயலைப் பார்ப்பா
னெல்லி வந்து நில்லாது புக்குச்
2 சொல்லிய சொல்லோ சிலவே யதற்கே

---

க. வயலைக்கொடி - பசலைக்கொடி. மருங்குல் - இடை.

உ. வருந்துதலையுடைய ஊர்ந்து செலலுகின்ற நடையினையுடைய இளம்பரு வத்தந்தனன்; "ஒலலெளா ஞாலத் துணர்வோ விழுமிதே,நல்லிசை முச்செந்தீ நான் மறையோ.ா - செல்லவம், வொ்ற ிறி மீளா விறல்வேந்தர் வெம்பகை, யென்றன்றி 'மீண்டதிலா'' (பு - வே. அ: கஅ.)

பாட்டிற்கு இவ்வழி மேற்கோள் ; "தன்மையாவது -

தன்மையென்னு மெய்ப்
சாதியியல்பு ; பார்ப்பார்

அரசர் இடையர் குறவரென்றின்னோர்மாட்டு ஒருவரையொருவர்
இடக்குபியல்பு'' தோல். மெய்ப்பாடு. சூ. கஉ - இளம்.

ஒவ்வாமற்

ங. எல்லி - இரவு. நிலலாதுபுக்கு - வாயில் காவலனுற்
சொலலிவிடாதே அரசனிடம் போய் ; "அருமறை நாவி னந்தணர்க்
காயினும்......அடையா வா யிலவ னருங்கடை குறுகி'' சிறுபாண். உ0ச - ரு.

ச. 'சொல்லிய சொல்லோசில' : "பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற, சிலசொல்ல றேற்று தவர்'' குறள், ௬௪௯.

(பி - ம்.)—1 'மருங்கின்', 'மருங்கினுயவமது வேளரசன்'2
'சொல்லியது சொல்லோ'

௫ யேணியுஞ் சீப்பு மாற்றி
மாண்வினை யானையு மணி 1 களைந் தனவே.*

திணை - வாகை ; துறை - பார்ப்பனவாகை.

மதுரைவேளாசான்.

(௩0௫)

---

௫. சீப்பு - கதவுக்கு வலியாக உள்வாயிற்படியிலே நிலத்தே வீழ இடும் மரம் (சிலப். கரு: உகரு - அடியார்.) இஃது ஒருவகைத்தாழ்.

௬. மாண்வினையானை - மாட்சிமைப்பட்ட தொழிலையுடையயானை ; மாட்சிமையாவது - போரிலே எதிர்த்தாலன்றி மற்றஇடத்து ஒருயிரையும் துன் புறுத்தாமை ; "வினைநவில் யானை", "தொழினவில் யானை" (பதிற். அஉ, அச.) மணி - யானையின் இருபக்கத் தும் அணியப்படும் மணி ; "மணியிலாக் குஞ்சரம் வேந்தூர்த லின்று" இன்னா. கச.

* ம. அந்தணன்தூது சென்றதற்கும் (தொல். அகத்திணை. சூ. உஅ இளம்; ஷை ஷை ஷை உசு-ந; நம்பி. சூ. எ௫ ; இ-வி. சசஅ-உஉர), தூதுரைகேட்ட அகத்துழிஞையோன்திறம் கண்டோர் கூறியதற்கும் (தொல். புறத்திணை. சூ. கஉ - ந) மேற்கோள்.

(பி - ம்.)—1 'களைந்தனனே', 'களைந்தனனே'

---

(௩0௬) களிறுபொரக் 1 கலங்கு 2 கழன்முள் வேலி
யரிதுன் கூவ லங்குடிச் சீறூ
ரொலிமென் கூந்த லொண்ணுத லரிவை

நடுகற் கைதொழுது பரவு மொடியாது
ரு விருந்தெதிர் பெறுகதில் யானே யென்னையு

க. கழல - கழற்கொடி: "கழன்முள்வேலி" பெரும்பாண்: கருச, கஅச - ரு; முல்லை. உஎ.

உ. கூவல் - கிணறு.

க-உ. யானை உழக்குதலாற் கலங்கிய கூவல்; முள்ளையுடைய கழற்கொடியாலாகிய வேலியையுடைய சீறூர்.

ங. தழைத்த மெல்லியகூந்தலையும் ஒள்ளியநெற்றியையுமுடைய "ஒலிமென்கூந்தல்" புறநா. கசசு: ங; குறுந். உஉரு.

அரிவை;

ச. நடுகல்லைத் தொழுதல் மரபென்பதை, "அடும்புகழ் பாடி யழுதழுது நோனு, திடும்பையுள் வைகித் திருந்த - கடும்பொடு, கைவண் குருசில்கற் கை தொழூஉச் செல்பாண, தெய்வமாய் நின்றான் றிசைக்கு" (பு - வெ. கஎ: கடு) என்பதனுலுணர்க. பரவும் - துதிப்பாள். ஒடியாது - ஒழியாது; தவிராது.

ரு. யான் விருந்தைப் பெறுவேனுக; தில், விழைவின்கண்வந்தது. என் ஐயும் - என் கணவனும்,

(பி - ம்.)—1 'கலங்கி' 2 'கன்முன்'

மொ.............................வேந்தனொடு
நாடுதரு விழுப்பகை யெய்துக வெனவே.*

திணை - அது ; துறை - மூதின்முல்லை.

அள்ளூர்நன்முல்லையார்.

(௩0௬)

எ. பகை எய்துக வென்று வேண்டியது, தன்கணவன் நிச்சயமாக வெல்லுவானென்று துணிந்து.

(எ) எனப் (௪) பரவுமென்க.

* இது கண்டோர் கூற்று.

---

(௩0எ) ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ
குன்றத் தன்ன களிற்றொடு பட்டோன்
[1] வம்பலன் போலத் தோன்று முதுக்காண்
வேனல் வரியணில் வாலத் தன்ன
கான வூகின் கழன்றுகு முதுவீ
யரியல் வான்குழற் சுரியற் றங்க
நீரும் புல்லு [2] மீயா துமணர்
யாருமி லொருசிறை முடத்தொடு துறந்த
வாழா வான்பக டேய்ப்பத் [3] தெறுவர்
[4] பேருயிர் கொள்ளு [5] மாதோ வதுகண்டு

---

க. மு. புறநா. உ௩ரு: கஎ; குறுந். கஎசு; பற்றுக்கோடாகிய என் தலைவன் எங்கே உள்ளானோ ?

உ. பட்டோனென்பது சுட்டிப்பொருளது.

௩. வம்பலன் - அயலான். உதுக்காண் - அவ்விடத்தே பார்; "எவன் விரைந்து சேறி யுதுக்காஸ்" கலி. ௧௦௮.

௪. வேனல் - வேனிற்காலம். வரியணில் - முதுகில் மூன்று வரிகளை யுடைய அணிற்பிள்ளை; "மூவரியணில்" (தொல். மரபு. சூ. ௬.) வாலம்-வால்.

௫. ஊகு - ஊகம்புல். வீ - பூ; எழுவாய்.

௪ - ௫. அணில்வால் ஊகம்புல்லிற்குவமை.

௭. உமணர் - உப்புவாணிகர்.

௮. யாருமில் ஒருசிறை - ஒருவருமில்லாத ஒருபக்கத்தில்.

௯. பகடு - எருது. தெறுவர் - பகைவர்.

௧௦. பெரிய உயிர்களைக் கவருகின்றான்.

(உ) பட்டோன் (௧௦) பேருயிர் கொள்ளும்.

(பி - ம்.)—1 'வம்பலபோலத்' 2 'ஈயாதுமன்ற' 3 'தெறுவவர்', 'தெறுவா' 4 'பேருயிர்க்கொ' 5 'மாதோவ......கெகள'

# புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

௪௨௭

வெஞ்சின யானை வேந்தனு மிக்களத்
தெஞ்சலிற் சிறந்தது பிறிதொன் றில்லெனப்
பண்கொளற் கருமை நோக்கி
நெஞ்சற வீழ்ந்த புரைமை யோனே.*

திணை - தும்பை; துறை - களிற்றுடனிலை.

..................

(௩௦௭)

* ம. தும்பைத்திணைத் துறைகளுள், 'களிறெறிந் தெதிர்ந்தோர்பாடு' என்றதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. கச - இளம்.

---

(௩0அ) பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பின்
மின்னேர் பச்சை மிஞிற்றுக்குரற் சீறியாழ்
நன்மை நிறைந்த நயவரு பாண
சீறூர் மன்னன் சிறியிலை யெஃகம்
௫ வேந்தூர் யானை யேந்துமுகத் ததுவே
வேந்துடன் றெறிந்த [1] வேலே யென்னை
சாந்தா ரகல முளங்கழிந் தன்றே
யுளங்கழி சுடர்ப்படை யேந்திநம் [2] பெருவிற

---

௧ - ௨. "பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பி, னின்குரற் சீறியாழ்" (சிறுபாண். ௩௪-௫); "பொன்வார்ந் தன்ன புரியடங்கு நரம்பிற், றொடைய மை கேள்வி" (பெரும்பாண். ௧௫-௬); "பொன் வார்ந் தனையாழ் னரம்பு வார்ந்து" பாகவதம், ௧0: கோவத்தன. ௩௯.

௧ - ௩. பொற்கம்பியினை ஒத்த முறுக்கு அடங்கின நரம்பினையும், மின்னலை ஒத்த தோலினையும் மிஞிறென்னும் வண்டுச்சாதியின் குரலைபோன்ற ஓசையையுமுடைய சிறிய யாழக் கல்வியின் நன்மை நிறைந்த விருப்பம் வந்தபாண!

௪. சீறூர் மன்னன் - குறுநிலமன்னன். எஃகம் - வேல்;

௫. வேந்தன் ஊருகின்ற. ஏந்துமுகம் - எடுத்தமுகம்.

எழுவாய்.

௪ - ௫. எஃகம் முகத்தது: "வேந்தூர் யானைக் கலல, போலான்ற னிலங்கிலை வேலே" புறநா. ௩0௧ : ௧௫ - ௬.

தேந்துவன்

௯ - எ. அரசன் கோபித்தெறிந்த வேலை என் தலைவனது சந்தனம் பூசிய
மார்பின் உள்ளே சென்றது.

அ - ௯. நம்பெருவிறல், தன் மார்பின் உட்சென்ற அவ்வொளிபொருந்திய வேற்படையைப் பறித்து எடுத்துச் செலுத்தி ஓட்டிய காலத்து ; பெருவிறல் - மிக்க வலியை யுடையவன்.

(பி - ம்.)—1 'வேலேயன்னே' 2 'பெருவ...வாபுள்தலைமடப்பிழ'

# சஉஅ புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

வோச்சினன் றுரந்த காலை [1] மற்றவன்
௧௦ புன்றலை மடப்பிடி நாணக்
குஞ்சர மெல்லாம் புறக்கொடுத் தனவே.*

திணை - வாகை ; துறை - மூதின்முல்லை.

கோவூர்கிழார்.

(௩௦அ)

௯ - ௧௧. பிடி- பெண்யானை; அது வேந்தனூர்தி. அவ்விடத்துப் புல்லிய தலையை யுடைய பிடிநாணக் களிறுகளெல்லாம் புறங்கொடுத்தோடின.

*மு. ஆரமரோட்டலென்னுந் துறைக்கு மேற்கோள் காட்டி, 'இது சீறூர் மன்னன் வேந்தனைப் புறங் கண்டது' என்பர்; தொல். புறத்திணை. சூ. ரு-ந.

(பி - ம்.)—1 'மேற்றவர்'

(௩0௬.) இரும்பு[1]முகஞ் சிதைய நூறி யொன்னா
ரருஞ்சமங் கடத்த லேனோர்க்கு மெளிதே
நல்லரா வுறையும் புற்றம் போலவுங்
கொல்லேறு திரிதரு மன்றம் போலவு
௫ மாற்றருந் துப்பின் மாற்றோர் பாசறை
[2] யுளனென வெரூஉ மோரொளி

---

௧ - ௨. பகைவருடைய படைக்கலங்களின் முகஞ்சிதையும்படி தங்கள் படைக்கலங்களால் அவருடைய போரை வெல்லுதல் மற்றவர்க்கும் எளிதாகிய காரியம். இரும்பு, படைக்கலத்துக்கு ஆகுபெயர். ஏனோர், ஏனையோ ரென் பதன் விகாரம்.

௩. நல்லரா - நாகம் ; "நாமநல்லரா" (அகநா. ௭௨) எனச் செய்யுளினும், 'நல்ல பாம்பு' என வழக்கிலும் உண்மை அறிக. இஃது உறையுமிடத்
தைப் பிறர் அஞ்சி யணுகாரென்பது, "வரி மிடற், றரவுறை புற்றத் தற்றே நாளும், புரவலர் புன்கணோக்கா திரவலர்க், கருகாதீயும் வண்மை, யுரைசா னெடுந்தகை யோம்பு மூரே" (புறநா. ௩௨௯ : ௫ - ௯) என்பதனாலும் விளங்கும்.

௪. கொல்லுகின்ற இடபம் திரிகின்ற மன்றம் - பசுக்கள் தங்கும் பொதுவிடம் ; "கொல்லேற்றுக் கோடஞ்சு வானை மறுமையும், புல்லாளே யாய மகள்" கலி. ௧0௩.

௫ - ௬. குணமடியாகத் தோன்றிய வினைக்குறிப்புச்சொற்கள் பலவிகற் பப்பட்டு வருமென்று கூறி,"மாற்றருந்துப்பின் மாற்றோர் பாசறையுளன்"என்பதை ஒருவகைக்கு மேற்கோளாகக் காட்டினர் ; நன் - வி. சூ. ௩௨௧.

௬. ஒளி - பிறர்க்கு அச்சமுண்டாதற்குக் காரணமான நன்மதிப்பு ; ஒளியென்பதற்குப் பரிமேலழகர் (குறள், ௬௯௮) எழுதிய விசேடக்குறிப்பும், "உறங்குமாயினு மன்னவன் றன்னொளி, கறங்கு தெண்டிரை வையகங் காக்கு மால்" (சீவக. ௨௪௮) என்பதும் இங்கே அறியற்பாலன.

(பி-ம்.)—1 'முகளு. . .யொன்' 2 'உளனேவருஉம்', 'உளனெனவெருஉம்'

# புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

## ௩௨௩

வலனுயர் நெடுவே 1 லென்னைகண் ணதுவே.*

திணை - தும்பை ; துறை - நூழிலாட்டு.

மதுரையிளங்கண்ணிக்கௌசிகனர்.

(௩௦௧)

---

எ. வென்றோர் வேலையுயர்த்தல் மரபு; "வென்று......உயாகநும வேலே" (புறநா. ௫அ), "வென்னைத்துவேனுயர்த்த வேந்து" பு - வே. ௬: ௧௧.

௫ - எ. மாற்றுதற்கரிய வலியொடு பகைவர் பாசறைக்கண்ணே இவன் இருக்கிறுெ ன்று வெருவதற்குக் காரணமாகிய ஒப்பற்ற ஒளி வெற்றியால் உயர்த்தும் நெடிய வேற்படையையுடைய எள் தலைவனிடத்தேயுள்ளது.

௯ - எ. ஒளி எள்ளைகண் ணது.

* ௰ம. "பெரும்பகைதாங்கும் வேலினும்' என்பதனுரையில, சான்றோர் பெரும்பாலும் வேற்படையையே சிறப்பித்துக் கூறுவரென்றுகூறி, இதனை மேற்கோள் காட்டினர் ; தொல். புறத்திணை. சூ. ௨௧ - ந.

(பி - ம்.)—1 'என்னைக்கண', 'என்னைக்கண்ணதுவே'

---

(௩௧௦.) பால்கொண்டு மடுப்பவு முண்ணு னாகலிற்

செரூஅ தோச்சிய சிறுகோ லஞ்சியொ
டுயவொடு வருந்து மன்னே யினியே என
புகர்நிறங் கொண்ட களிறட் டானுன்
முன்னாள் வீழ்ந்த வுரவோர் மகனே
யுன்னில னென்னும் புண்ணொன் றம்பு
மானுளை யன்ன குடுமித்
தோன்றிசைக் கிடந்த 1 புல்லணலோனே.

**திணையும் துறையும் அவை.**

**பொன்முடியார்.**

**(௩௧0)**

---

க. மடுப்ப - உண்பிக்க. உ. அஞ்சி - ஒருகுறுநிலமன்னன். ஒடு - ஆல்.

௩. உயவு - கவலை. இனி - இப்பொழுது.

௪. ஆனுன் - அமையானுகி. ௫. முன்னுள் - முதல்நாள்.

௬. புண்ணில் ஒன்றிய அம்பை யான் உன்னிலனென்பான்.

௭. புல்லுளைக்குடுமிப்புதல்வன் : **புறநா.** ௨௭௩ ; ௩. **ஐங்குறு.** ௨0௨ பார்க்க.

௮. தோல் - யானை ; கேடகமுமாம். அணல் - தாடி ; **"மையணற் காளை" புறநா.** ௮௩.

**(பி - ம்.)**—1 'புல்லணலோனே'

---



**(௩௧௧.)** களர்ப்படு கூவற் றோண்டி நாளும்

புலைத்தி கழீஇய தூவெள் ளறுவை
தாதெரு [1] மறுகின் மாசுண விருந்து
பலர்குறை செய்த மலர்தா ரண்ணற்
ரு கொருவரு மில்லை மாதோ செருவத்துச்
சிறப்புடைச் செங்கண் புகையவோர்
தோல்கொண்டு மறைக்குஞ் [2] சால்புடை யோனே.*

திணை - அது ; துறை - பாண்பாட்டு.

ஔவையார்.

(௩௧௧)

---

௧. களர் - உவர்நிலம். கூவல - கிணறு ; "பூவற்படுவிற் கூவற்றோண் டிய" புறநா. ௩௧௯.

௨. புலைத்தி - வண்ணாத்தி ; "உடையோர் பான்மையிற் பெருங்கை தூவா, வறனில் புலைத்தி" (நற். ௯0), "நலத்தகைப் புலைத்தி பசைதோய்த் தெடுத்துத், தலைப்புடை போக்கித்தண்கயத்திட்டநீரிற் பிரியா" (குறுந்.௩௩0), "ஆடைகொண்டொலிக்கு நின்புலைத்தி காட்டென்றாளோ" (கலி. ௭௨.) தூவெள் ளறுவை - மிக வெள்ளிய ஆடை ; "தூவெள் ளறுவை போர்ப்பித்திலதே" புறநா. ௨௮௬ : ௫.

௩. தாதெருமறுகு - எருப்பொடிகளையுடைய வீதி ; "தாதெருமறுகிற் பாசவைற" புறநா. ௩௩ : ௧௧.

௨ - ௩. அறுவை அழுக்குண்ணும்படியிருந்து. ௪. சூலை -காரியம்.

௫. உதவி செய்தற்கு ஒருவருமில்லை. ௭. தோல் - கேடகம்.

* தலைவனது ஆற்றல் கூறியதனாற் பாண்பாட்டாயிற்று.

(பி - ம்.)—[1] 'மறுகிறவா' [2] 'சாலபுடையோரே'

---

(௩௪௨.) ஈன்று புறந்தருத லென்றலைக் கடனே
சான்றோ னாக்குத றந்தைக்குக் கடனே

---

க. பெற்றுப்பாதுகாத்தல என்னிடத்திலுள்ள கடமையாம்; "ஈன்று புறந்தந்தவெம்முமுள்ளாள்" (அகநா. ௩௫.) தலைக்கடன் - முதன்மையான கடனுமாம்.

உ. தன் குலத்துக்குரிய படைக்கலப்பயிற்சியாகிய கல்வி அதற்குரிய அறிவு அதற்குரிய செய்கைகள் ஆகிய இவற்றால் நிறைந்தவனாகச் செய்தல் தகப்பனுக்குக் கடமையாம்; "உயர்மிக்க தந்தை" என்பதற்கு, 'பிள்ளை உயர்ச்சிமிகு தற்குக் காரணமான தந்தை' என்று பொருள் கூறி இவ்வடியை மேற்கோள்காட்டினர்; சீவக. ௪௯௩ - ந.

# புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

௩௱௧௨

1 வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
2 நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே
௫ யொளிறு 3 வா ளருஞ்சம முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே.*

திணை - வாகை; துறை - மூதின்முல்லை.
பொன்முடியார்.

(௩௪௨)

---

௩. படைக்கலத்தைத் திருத்தமாகச் செய்துகொடுத்தல்

கொல்லனுக்குக் டமையாகும் ; வடித்தல் - கூரிதாக்கலுமாம். 'கொல்லன்' வன்பதற்கு வேல் மடிக்கும் கொல்லனென இவ்வடியை உட்கொண்டு அடியார்க்குநல்லார் பொ 'ளெழுதியிருத்தல் ஈண்டு அறியற்பாலது ;

சிலப். கஉ: "இளமாவெயிற்றி".

ரு - சு. "செல்சமமுருக்கி" (மநுத. கூகூ), "பொருந்தா மன்ன ரருஞ் மமுருக்கி, யக்களத் தொழிதல் செல்லாய் மிக்க, புகர்முகக் குஞ்சர மெறிந்த

வஃக, மதன்முகத் தொழிய நீபோந் தனையே" (தகடூர்யாத்திரை, "வாது

ப') என்பவை இங்கே அறியற்பாலன.

* மு. தொல். புறத்திணை. சூ. உச - ந. மேற்கோள்.

(பி - ம்.)—1 'வேலழித்து' 2 'தன்னணடை', 'ந...ளணடை' 3 'வாள் வஞ்சமமுருக்கி'

---

(நகக.) அத்த நண்ணிய நாடுகெழு பெருவிறல்
கைப்பொருள் யாதொன்று மிலனே நச்சிக்
காணிய சென்ற விரவன் மாக்கள்
1 களிறொடு நெடுந்தேர் வேண்டினுங் 2 கடவ
ரு வுப்பொய் சாகாட் டுமணர் காட்ட
கழிமுரி குன்றத் தற்றே

---

க. அத்தம் - அரியவழி. பெருவிறல் - தலைவன். உ. நச்சி - விரும்பி.

ந. காணிய - காண்பதற்கு. ச. கடவ - ஈதற்குரியன.

ரு. உப்பைக்கொண்டு செலுத்துகின்ற வண்டிகளையுடைய உப்பு வாணி ரா ; ஒய்தல் - செலுத்துதல்; "உமண, ருப்பொ யொழுகை யெண்ணுபமா ;தா"புறநா. ககசு: எ - அ.

உ - சு. "ஒன்னு, ராரெயி லவர்கட் டாகவு நுமதெனப், பாண்கடனிறுக்
கும் வள்ளியோய்" (புறநா. உ0௩: கூ - கக), "இளைபொரு ளில்லான்
தொடையே கொடைப்பயன்" (நாலடி. ௬௫) என்பவற்றை இவ்வடிகளின்
பொருள் நினைப்பிக்கின்றது.

(பி - ம்.)—1 'களிறுெடுநெடுந்தேர்', 'களிறுெடுகடுந்தேர்' 2'கடல', 'கடவு'

சுகூஉ புறநானூறு மூலமும் குறிப்புரையும்

வெள்ளமை யின்றவ வுள்ளிய பொருளே.*

திணை - அது ; துறை - வல்லாண்முல்லை.

மாங்குடிகிழார். (ந

---

... அவன் கருதியபொருள் இகழ்ப்பாலதன்று; ... இகழுத

* மு. 'வேந்தன் சீர்சால சிறப்பெடுத் துரைத்தல்' (தொல். புறத்திணை. சூ. ரு - ந) எனபதற்கு, 'வேந்தற்குரிய புகழமைந்த தலைமைகளை ஒருவற்கு ஆக அவன் படையாளரும் பிறரும் கூறல்' என்று பொருள்கூறி, இதை மேற்கோள்காட்டி, இது படையாளர் கூற்றென்றும், இதற்கு முடிவேந்தர் சிறப்பெடுத்துரைத்தலென்ற கூறின் அது பொதுவியலிற் கூறலாகாதெ. றுணர்க வென்றும் கூறுவர்.

---

(௩கச.) மனைக்குவிளக் காகிய வாணுதல் கணவன்
முனைக்குவரம் பாகிய வென்வேல் நெடுந்தகை
நடுகற் பிறங்கிய வுவலிடு பறந்தலைப்
புன்காழ் நெல்லி வன்புலச் சீறூர்க்
குடியு மன்னுந் தானே கொடியெடுத்து

1 நிறையழிந் தெழுதரு தானைக்குச்
சிறையுந் தானேதன் னிறைவிழு முறினே.

**திணையும் துறையும் அவை.**

**ஐயூர்முடவனார்.**

(௩௧௪

---

௧. "மனைக்கு விளக்க மடவாள்" நான்மணி. ௧0௪.

௨. முனை - போர். வென் - வெற்றி.

௩. நடுகல் மிகுந்த பறந்தலை, உவலிடுபறந்தலையெனக் கூட்டுக. உவலிடு தழைகளைப்பெய்த. பறந்தலை - பாழ்பட்ட இடம்.

௪. புல்லியகோட்டையையுடையநெல்லி. வன்புலம்-குறிஞ்சியுமுல்லையு,

௫. குடிமக்களுளொருவனும் தானே; மன், உம், அசைநிலை.

௬. நிறை - நிறுத்தப்படுதல்; "நிறையருந்தானை" சிலப். ௨௫ : ௧௭௮.

௭. சிறை - காவல். இறைவிழுமமுறின் - அரசன் துன்பமுற்றால்; "வே
துவிழுமுறவே" புறநா. ௩௧௬ : ௧௨.

(பி - ம்.)—1 ‘நிறையறிந் தெழுந்தரும்’, ‘நிறையறிந்தெழுதரு’

---



(௩௧௫.) உடைய னாயி னுண்ணவும் வல்லன்

கடவர் மீது மிரப்போர்க் கீயு
மடவர் மகிழ்துணை நெடுமா னஞ்சி
யில்லிறைச் செரீஇய ஞெலிகோல் போலத்
௫ தோன்றா திருக்கவும் வல்லன் மற்றதன்
கான்றுபடு கனையெரி போலத்
தோன்றவும் வல்லன்றான் தோன்றுங் காலே.

**திணையும் துறையும் அவை.**

நெடுமானஞ்சியை 1 ஔவையார்.

(௩௱௧௫)

---

௩. மடவர்-அறிவில்லார் (புறநா.௧௦௬:௪.) நெடுமானஞ்சி-ஒரு தலைவன்.

௨ - ௩. கடவர் - படைவீரர் முதலியோர். மீதும்-மேற்பட்டும். ஈயுமஞ்சி. 'மடவர் மகிழ்துணை' என்பது, "பாணரொக்கல" (திருச்சிற். ௪௦௦) என்பது போல்வது.

௪ - ௫. அவன் வீட்டின் இறப்பிற் செருகப்பட்ட தீக்கடைகோலைப் போலத்தன்வலி வெளிப்பட வேண்டாத காலத்து அடங்கியிருக்கவும் வல்லன்.

௫ - ௭. ஞெலிகோலாலே கக்கப்பட்டுத் தோன்றுகின்ற காட்டுத்தீயைப்போல வெளிப்படத்தோன்ற வேண்டிய காலத்துத்தோன்றவும் வல்லன்.

(பி - ம்.)—1 'ஔவையாரால்'

---

(௩௱௧௬.) கள்ளின் வாழ்த்திக் கள்ளின் 1 வாழ்த்திக்
காட்டொடு மிடைந்த சீயா முன்றி
லாட்செருக் 2 கனந்தர்த் துஞ்சு வோனே
யவனெம் 3 மிறைவன் யாமவன் பாணர்
௫ நெருநை வந்த விருந்திற்கு மற்றுத்த
னிரும்புடைப் பழவாள் வைத்தன னின்றிக்

க. கள்ளினைவாழ்த்தி: புறநா. உகூஎ: சு.
உ.
(புறநா.

சீத்தல்- தூத்தல்; பெருக்கல; "மந்தி சீக்கு மணங்குடை. முன்றில்"
உசஎ: ச); "மந்தி சீக்கு மாதுஞ்சு முன்றில" பெரும்பாண்.சகூஎ.

ரு. நாட்செருக்குஅனந்தர்-விடியற்காலத்துக் கள்ளைக்குடித்த மயக்கத்தால்.
க - ச. காட்டு-செத்தை; "துடைப்பந்துகட்காட்டுப்புலவிதழ்", "காட்டுக்

கனைந்து" (ஆசார. சரு, சசு.) ஒடு, அசை.
தானுண்டகள்ளைவாழ்த்தி நாட்கால அனந்தரால்

தூவாதமுன்வாயிலினிடத்தே
துயிலவோன்; "முன்றிற்கிடந்

தபெருங்களியாளர்"(புறநா.ருஎ:உ.)தூங்குவோனாகிய அவனே எம்தலைவன்.
ரு - சு. மேற்றுவந்த விருந்தினரை உபசரித்தற்காகத் தன்பழைய வாட்படையை ஈடாகவைத்தான். இன்று - இன்றைத்தினம்.
(பி - ம்.)—1 'வாழ்த்திகள்ளின்...தசீயா' 2 'களந்தரத்துஞ்சு' 3 'இறை யவன்'

55

# சகூச புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

கருங்கோட்டுச் சீறியாழ் பணைய மிதுகொண்
1 டுவதி லாள னென்னுது நீயும்
2 வள்ளி மருங்குல் வயங்கிழை யணியக்
கல்ளுடைக் கலத்தேம் யாமகிழ் தூங்கச்
3 சென்றுவாய் சிவந்துமேல் வருக
சிறுகண் யானை வேந்துவிழு முறவே.*

திணையும் துறையும் அவை.
மதுரைக்கள்ளிற் [4]கடையத்தன்வெண்ணாகனார். (௩௧௬)

எ. பணையம் - ஈடு. அ. ஈயாதவனென்று கருதாமல் நீயும்.

௯. பூக்கொடிபோன்ற இடையையுடைய நின்விறலி விளங்கிய அணி கலத்தை அணியவும்; வள்ளி - பூக்கொடி.

* மூ "மறவன் ஆரமரோட்டல் கூறியது" என்பர்; தொல். புறத்திணை. ௬. ௫-௩.

(பி - ம்.)—1 'ஈதலிலாளன்' 2 'வள்ளியலகு விளங்கிழை' 3 'சென்று நாசிவந்து மேவருசிறுகண்', 'செறுவர்சிவந்து' 'செறுநர்சிவந்து' 4 'கடையத்த னார் வெண்ணாகனார்'

---

(௩௧௭.) வெண்வேல்................நது
முன்றிற் கிடந்த பெருங்களி யாளற்
கதளுண்டாயினும் பாயுண் டாயினும்
யாதுண் டாயினுங் கொடுமின் வல்லே
௫ வேட்கை மீளப... ..................
.......................கு மெமக்கும் பிறர்க்கும்
யார்க்கு மீய்ந்து [1] தூயிலேற் பினனே.

திணையும் துறையும் அவை.
[2] வேம்பற்றூர்க்குமரனார்.
(௩௧௭)

உ. முன்வாயிலிற் படுத்துக்கிடந்த மிக்க களிப்பினையுடையானுக்கு.

௩. அதள் - தோல். இதிற் சிலசாதியார் படுத்தல இயல்பு; அது, "மான்றோற் பள்ளி மகவொடு முடங்கி" (பெரும்பாண். ௮௯), "உழையதட்பள்ளி, யுவலைக்கண்ணி வன்சொ லிளைஞர்" (மதுரை. ௩௧௦ - ௧௧) என்பவற்றாலும் அறியலாகும்.

௪. வல்லே - விரைவாக.

எ. துயிலேற்பினன் - துயிலேற்றலையுடையான். ஆதலால் அக்களியாள னுக்கு யாதுண்டாயினும் வல்லே கொடுமினென்க.

(பி - ம்.)—1 'துயலேற்பினனே' 2 'வேப்பத்தூர்க்குமரன்'

---

# புறநானூற மூலமும் குறிப்புரையும்.



(௩௧௮.) கொய்யடகு வாடத் தருவிற குணங்க
மயிலஞ் சாயன் மாஅ யோளொடு
பசித்தன் றம்ம பெருந்தகை யூரே
மனையுறை குரீஇக் கறை [1] யணற் சேவல்
பாணர் [2] நரம்பின் சுகிரொடு வயமான்
[3] குரற்செய் பீலியி னிழைத்த குடம்பைப்
பெருஞ்[4] செய் நெல்லி னரிசி யார்ந்துதன்
புன்புறப் பெடையொடு வதியும்
யாணர்த் தாகும் வேந்துவிழு முறினே.

திணையும் துறையும் அவை.

பெருங்குன்றூர்கிழார்.

(௩௧௮)

---

க. கொய்த இலைக்கறிகள் வாடவும் கொண்டுவந்த விறகு உணங்கவும்.

உ. மாஅயோள் - மாமை நிறத்தினை யுடையவள் ; மனைவி. மாமை - அழகிய நிறம் ; "மாமைக்கவினே", ஐங்குறு. ௩௫, ௧௦௩, ௧௩௪.

௩. பசித்தன்று - பசித்தது; ஊர்பசித்தது.

௪. கழுத்திற் கறுப்பினையுடைய ஆண்குருவி; "உள்ளிறைக் குரீஇக் காரணற் சேவல்" நற். ௧௮௧.

௫. வயமான் - சிங்கம். ௬. செய்குடம்பை - கூடு.

௭. நெல்லினரிசி - நெல்லொடு கூடிய அரிசி. ஆர்ந்து - உண்டு.

௮. வாடிய ஆம்பற்பூப்போன்ற சிறகுடைமையாற் புன்புறப் பெடை யென்றார்; "புன்புறப் புறவின் கணநிரை" பதிற். ௩௧ : ௧௧.

௪ - ௮. "ஆம்பற் பூவின் சாம்ப லன்ன, கூம்பிய சிறகர் மனையுறை குரீஇ, முன்றி லுணங்கல் மாந்தி மன்றத்,தெருவினுண்டாது குடைவன வாடி, யில்லிறைப் பள்ளித்தம் பிள்ளையொடு வதியும்" குறுந். ௪௬.

௯. யாணர்த்து - புதுவருவாயினையுடையது. வேந்து - பகைவேந்தன். விழுமுறின்=விழுமமுறின் - துன்பமுற்றால்; "தன் னிறைவிழுமுறினே" புறநா. ௩௧௪: ௭.

(ஜீ - ம்.)—1 'பணற செலலப், பாண' 2 'நரம்பிசைசீரொடு' 3 'குரசை பிலியினிளமை மூத்தகுடம்பை', 'குரசெய்பீலியினிமைமூத்த', 'பூத்த' 4 'செய் செல்லின்'

---

## ௩௨௬. புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

(௩௧௯.) பூவற் படுவிற் கூவற் 1 றோண்டிய
செங்கட் சின்னீர் பெய்த சீறின்

முன்றி லிருந்த முதுவாய்ச் சாடி
இ [2] யாங்கஃ துண்டெனா வறிது மா றினறு
படலை முன்றிற் சிறுதினை யுணங்கல்
[3] புறவு மிதலு மறவு முண்கெனப்
பெய்தற் கெல்லின்று பொழுதே யதனான்
முயல்சுட்ட வாயினுந் தருகுவேம் [4] புகுதந்
[5] தீங்கிருந் தீமோ முதுவாய்ப் பாண
கொடுங்கோட் டாமா னடுங்குதலைக் குழவி
புன்றலைச் சிறாஅர் கன்றெனப் பூட்டுஞ்
சீறூர் மன்ன னெருநை ஞாங்கர்
வேந்துவிடு தொழிலொடு சென்றனன் வந்துநின்
பாடினி மாலை யணிய
வாடாத் தாமரை சூட்டுவ னினக்கே.

**திணையும் துறையும் அவை.**

**ஆலங்குடி வங்கனார்.**

(௩௧௯)

௧. பூவல் - செம்மண். படு - மடு. தோண்டிய - தோண்டுதலா லுண்டாகிய; "களர்ப்படு கூவற் றோண்டி" (புறநா. ௩௧௧ : ௧); "பூவல்-செம்மண்; பூவற் படுவிற் கூவற் றோண்டிய வெள்ளூர் புறத்திலும்" சிலப். ௧௯ : ௩ - ௯. அடியார்.

௨ - ௩. பெய்த சாடி. ௪. அந்நீர் மாசிலலாதது.

௫. படலை - தழை ; படலுமாம். உணங்கல தினை - உலர்ந்த தினை.

௬. இதல் - ஒருவகைப் பறவை ; "இதல்கவர்ந்துண்டென" (புறநா. ௩௨௦ : ௧௧); "இதன்முட்செங்கனை, கெருஞ்குருகுலைப்பிடவம்" (அகநா. ௩.) அறவும் - மிகவும்.

௨௩;

௭. பொழுது எல்லின்று - சூரியன் ஒளிமழுங்கியது ;

"ஏகுதிமடந்தை யெல்லின்று பொழுதே" நற். உகூச.

௧. இருந்தீமோ - இரு. முது - பேரறிவு ; சஅ, கஅ0 ; பதிற். கூகூ. "முதுவாயிரவல" புறநா.

க0. ஆமான்கன்றை. கக. புன்றலை - சிவந்த தலை.

கஉ. மன்னன், எழுவாய். நெருநை ஞாங்கர் - நேற்று.

கங. பகைமேற்சென்றனன். கச. பாடினி - பாணிச்சி.

கரு. வாடாத்தாமரை - பொற்றாமரைப்பூ ; "எரியகைந் தன்ன வேடி ழுமரை, சுரியிரும் பித்தை பொலியச் சூட்டி" (பொருந. கருகூ - கூ0); "பைம் பொற் றாமரை பாணர்ச் சூட்டி" பதிற். சஅ.

கச - ரு. புறநா. கக: கக - எ ஆம்அடிகளின்குறிப்பைப் பார்க்க.

(பி-ம்.)—1 'ரெடிய" 2'யாகஃடுண்டென','யாறுஃடுண' 3 'மறவுமுண டெனப்', 'புறவுமீதலு' 4 'புகுவரீங்கிரு' 5 'ஈங்கிருந்தீமே', 'இருந்தீரேமுது'

---

# புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

௩௩௭

(௩௨0.) முன்றின் முஞ்ஞையொடு முசுண்டை பம்பிப்
பந்தர் வேண்டாப் பலர்தூங்கு நீழற்
கைம்மான் வேட்டுவன் கனைதுயின் மடிந்தெனப்
பார்வை மடப்பிணை தழீஇப் பிறிதோர்
ரு தீர்தொழிற் றனிக்கலை 1 திளைத்துவிளை யாட
வின்புறு 2 புணர்நிலை கண்ட மனையோள்
கணவ னெழுதலு மஞ்சிக் கலையே
பிணைவயிற் றீர்தலு மஞ்சி யாவது
மில்வழங் காமையிற் கல்லென வொலித்து

மானதட் பெய்த வுணங்குதினை வல்சி
கானக் கோழியோ டிதல்கவர்ந் தூண்டென
வார நெருப்பி னார னாறத்
தடிவார்ந் திட்ட முழுவள் ளூர
மிரும்பே ரொக்கலொ டொருங்கினி தருந்தித்
தங்கினை சென்மோ பாண தங்காது
வேந்துதரு விழுக்கூழ் பரிசிலர்க் கென்று

---

௧. முஞ்ஞை - முன்னை. முசுண்டை - முசுட்டைக்கொடி. பம்பி- பரவி.

௩. கைம்மான் வேட்டுவன் - யானைவேட்டையாடுபவன்; "ஆனைவேட்டுவ னானையும் பெறுமே" (புறநா.௨௧௪: ௪.) கனை-மிகுதி. துயின் மடிந்தென- தூங்க.

௪. பார்வை - பார்வை மிருகம்; மிருகங்களை வேட்டையிலகப்படுத்துவதற் காக வளர்த்துப்பழக்கஞ்செய்யப்படுவது (பெரிய.கண்ணப்ப. ௩.) பிணையை.

௫. தொழில் தீர்ந்த ஆண்மான். ௬. மான்களின் சேர்க்கையை.

௬ - ௯. கணவனெழுதற்கும் கலை பிணையினின்றும் நீர்தறகுமஞ்சி மனை யோள் புடைபெயர்ந்து நடவாமையால், ஒலித்தல், கானக்கோழிமுதலியவற் றின் றொழில்.

௧0. மான்றோலிலுலர்த்திய தினையாகிய உணவை.

௧௧. இதல் - ஒருவகைப்பறவை; புறநா. ௩௧௯: ௯-ஆம்அடிக்குறிப்பைப் பார்க்க.

௧௨. ஆரம் . சந்தனம். ஆரல் - ஒருவகைமீன்.

௧௩. தடிவு - தடிதல்; அறுத்தல். தடி - துண்டமுமாம். வள்ளூரம் - இறைச்சி; "முழூஉவள்ளூரம்" புறநா. ௨௩௯: ௨.

கசு. கரியபெரிய சுற்றத்தாருடன் ஒருங்குண்டு.
கரு. தங்கிச்செல.
கசு. சூழ் - பொருள்; "படைகுடி கூழமைச்சு" குறள், ௩அக.
(பி - ம்.)—1 'தினைத்து விளையாட' 2 'புணரா நிலை'



மருகா தியும் வண்மை
1 புரைசா னெடுந்தகை யோம்பு மூரே. நீயும்
துறையும் அனை.
வீரைவெளியனார். (௩உ(

கஅ. உரை - புகழ்.

(கஅ) ஊர்க்குச் (கரு) செல். (பி - ம்.)—1 'உரை
சொல்'

---

(௩உக.) பொரிப்புறப் பூழின் போர்வல் 1 சேவன்
மேந்தோல் களைந்த தீங்கொள் வெள்ளெட்
2 சுளகிடை யுணங்கற் செவ்வி 3 கொண்டுடன்
வேனிற் 4 கோங்கின் பூம்பொகுட் டன்ன
ரு குடந்தையஞ் செவிய கோட்டெலி யாட்டக்
கலியார் வரகின் பிறங்குபீ ளொளிக்கும்
வன்புல வைப்பி னதுவே சென்று
தின்பழம் பசீஇ..............னனே பாண

வாள்வடு விளங்கிய சென்னிச்
செருவெங் குருசி லோம்பு மூரே.

திணையும் துறையும் அவை.

உறையூர் மருத்துவன் தாமோதரனர்.

(௩௨௧

---

௧. பொரி - புள்ளி. பூழ் - குறும்பூழ்ப்பறவை.

௨. மேக்தோல - மேலேயுள்ளதோல். வெள்ளெள் - வெள்ளைநிறமுள்ள ஒருவகை எள்.

௩. உணங்கல் - உலருகின்ற வெள்ளெள்ளை; செவ்வியுணங்கலை. கொண்டு உடன்.

௪. செய்யுளிடத்து, காலத்தை அடையாக அடுத்துவருமொழி இன, தைக்காட்டாததற்கு மேற்கோள்; நன்-மயிலை. சூ. ௪௦௦: நன்-வி. சூ. ௪௦௧ இ - வி. சூ. ௩௧௨ - உரை.

௫. குடந்தை - வளைவு; "குடந்தையஞ் செவிய கோட்பவ ரொடுங்கி" அகநா. ௨௪௪. கோடு - கரை. ஆட்ட - அலைத்தற்கு. சேவல் எலியை அலைக்க

௬. பீள் - கரு. வரகின் பீளிற் சேவல் ஒளிக்கும்; பீளென்றது கதிர் போரை.

௧௦. செருவெங் குருசில் - போரை விரும்புதலையுடைய தலைவன்.

(பி - ம்,)—1 'செலவன' 2'களகிடை' 3'கொண்டென' 4'வேனிறகொண் டென '

---

# புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

(௩௨௨.) [1] உழுதூர் காளை யூழ்கோ டன்ன
கவைமுட் கள்ளிப் பொரியரைப் பொருந்திப்
புதுவர கரிகாற் கருப்பை பார்க்கும்
புன்றலைச் சிறாஅர் வில்லெடுத் தார்ப்பிற்
பெருங்கட் குறுமுயல் கருங்கல னுடைய
[2] மன்றிற் பாயும் வன்புலத் ததுவே
கரும்பி னெந்திரஞ் சிலைப்பி [3] னயல
திருஞ்சுவல் வாளை பிறழு மாங்கட்
டண்பணை யாளும் வேந்தர்க்குக்
கண்படை யீயா வேலோ னூரே.

திணையும் துறையும் அவை.

ஆவூர்கிழார்.

(௩௨௨)

---

௧. காளையின் செவ்வியழிந்த கொம்பையொத்த.

௨. பொருந்தியவர் சிறார்.

௧-௨. கள்ளியின் முள்ளுக்குக் கோடு உவமை; "குண்டைக் கோட்ட குறு முட் கள்ளி" அகநா. ௧௮௪: ௮.

௩. வரகு அரிகால் - வரகம்பயிரின் அரிந்த தாள் . கருப்பை - எலியை; "வேலிக்கருப்பை பார்க்கும்" புறநா. ௩௨௪: ௭.

௩ - ௪. எய்தசிறார் முழங்குவராயின்.

௫. முயல், எழுவாய், கருங்கலன் - மண்ணாற் செய்யப்பட்ட அழிசிற் பாண்டம்.

௪- ௬. "தாமயிர்க் குறுந்தா ணெடுஞ் செவிக் குறுமுயல், புன்றலைச் சிறு அர்மன்றத் தார்ப்பிற், படப்பொடுங் கும்மே" புறநா. ௩௩௪ : ௨ - ௪.

எ. எந்திரம் - ஆலை, "கரும்பி னெந்திரம்" ஐங்குறு. ருரு.

அ. சுவல் - பிடர். கூ. தண்பணை - மருதநிலத்தைச்சார்ந்த ஊர்கள்.

(கo) ஊர் (சு) வன்புலத்ததுவே.

(பி - ம்.)—1 'உழுதூர்க்காளை' 2 'முனைநினைபாயும்' 3 'அயலினிருஞ்சு வலி...யானை பிறழுமாங்கட்'

(கூ௨கூ.) புலிப்பாற் [1] பட்ட வாமான் குழவிக்குச்
சினங்கழி மூதாக் கன்றுமடுத் தூட்டுங்
கா............................................க்

க, புலியினிடத்தே அகப்பட்ட ஆமானினது கன்றினுக்கு.

உ. மூதா - முதியபசு. மடுத்து - சேர்த்து.

(பி - ம்.)—1 'பட்ட விரமான்'



குள்ளியது சுரக்கு மோம்பா வீகை
ரு வெள்வே [1] லாவ மாயி னொள்வாள்
கறையடி யானைக் கல்ல
துறைகழிப் பறியா வேலோ னூரே.

.................................................
...................................டார்கிழார்.

(கூ௨...

ச. சுரக்கும் - இடைவிடாமலளிக்கும்.

ரு - எ.

ஞுணர்த்தாது

'பெயர்நிலைக் கிளவியி னாஅ குநவும்' என்பதற்குத் தத்தம் பொ
பெயர்ந்த நிலைமையையுடைய சொல்லான் வருஞ்செய்யு
மெனப் பொருள்கூறி,''ஒள்வாட்......வேலோனாரே'' என்புழி,
வேலோனெ பது வேலையுடையோனென்னும் பொருள் பெயர்ந்து ஒ
நபெயர்த்தன்மையா நின்றது'' என்பர்; தொல். எச்ச. சூ. ருங - ந; இ-
வி. சூ. நஎ0-உரை.

(பி - ம்.)— 1' ஆப

---

(நஉச.) வெருக்குவிடை யன்ன [1] வெருணோக்குக் கயந்தலைப்

புள்ளூன் றின்ற புலவுநாறு கயவாய்
வெள்வாய் [2] வேட்டுவர் வீழ்துணை மகாஅர்
சிறியிலை [3] யுடையின் சுரையுடை வான்மு
ரு ளூக நுண்கோற் செறித்த வம்பின்
வலாஅர் வல்விற் [4] குலாவரக் கோலிப்
பருத்தி [5] வேலிக் கருப்பை பார்க்கும்

---

க. வெருக்குவிடை - காட்டுப்பூனையின் ஆண். கயந்தலை - மெலவியதலை வெருகினை விடையென்று கூறுவதற்கு இவ்வடி மேற்கோள்; தொல். மரபு. ( சுஅ. பேர்.

உ. கயவாய் - மெலவியவாய். உ - ங. கயவாய்மகார்.

ச. சிறிய இலைகளையுடைய உடைமரத்தின் உட்டுளையையுடைய வெள்ளி முள்ளை; ''உடையிலை நடுவண திடைபிறர்க் கின்றித், தாமேயாண்ட'' புறநா ஙசுங: உ - ங.

ரு. ஊக நுண்கோல - ஊகம்புலவின் ஈர்க்கில.

ச - ரு. உடைமுள்ளை ஊகங்கோலிற் கோத்த அம்பினைஉடையராய்.

சு. வலார் - வளார்; மலாரெனவழங்கும். குலாவர - வளைய.

எ. தொல். எச்ச. சூ. கஎ - ந. மேற்.

௬ - ௭. "ஆர்நாரின் றிண்கயிற்று லமைச்சிறுகோல் வளைத்தவில்லுங், கூ வாய்முண் ணுனிபதித்த கோற்கோலுங் கைக்கொண்டு, கார்மேனி மைந்தரோ( கான்புகுந்து கொடுவிலங்கி, னேர்வாய்மென் 'குருளைபல வெய்தல் செய்தா௳

(பி - ம்.)—1 'வெருளைக்குக்' 2 'வேட்டுவன்'3 'உடையிணை சுரையடை வானஞ்சுநுண்கோற்' 4 'குலா புறக்' 5 'வே ழ கரு பலிப்பார்க்கும்'

# புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

**௬௪௩**

புன்புலந் தழீஇய வங்குடிச் சீறூர்க்
குமிழுண் வெள்ளை [1] பகுவாய் பெயர்த்த
[2] வெண்காழ் [3] தாய [4] வண்காற் பந்த
ரிடையன் பொத்திய சிறுதீ விளக்கத்துப்
பாணரொ டிருந்த நாணுடை நெடுந்தகை
வலம்படு தானை வேந்தற்
குலந்துழி யுலக்கு நெஞ்சறி துணையே.*

**திணையும் துறையும் அவை.**

**ஆலத்தூர்கிழார்.**

**(௩௨௪)**

---

விளையாட்டால்" (சீகாளத்திப். கண்ணப்ப. ௨௧) என்பது இவ்வடிகளின் பொருளை ஒருவாறு தழுவிவந்திருத்தல் காண்க.

௭ - ௮. "பருத்திவேலிச் சீறூர்" புறநா. ௨௯௯: ௧.

௯. குமிழுண் வெள்ளை - குமிழம்பழத்தை உண்ணும் வெள்ளாடு.

௧௦. காழ் - கொட்டை. தாய - பரந்த. பந்தரின்கீழ்.

௧௧. இடையன்:(புறநா. ௩௩௧: ௪ - ௫.) பொத்திய - மூட்டிய.

௧௨. நாண் - மானம். ௧௪. உலக்கும் - இறக்கும்.

(௧௨) நெடுந்தகை (௧௪) துணை.

* ர. வேந்தற்குத் துணையாகச் செல்வோரைக் கூறியதற்கு தொல். புறத்திணை. சூ. ௫ - ந.

மேற்கோள்; (பி - ம்.)—1 'மதுவாய்', 'மறுகுவாய்','மறுவாய்' 2 'ரிடை' 3 'காய' 4 'வன்காழ்ப்பந்தர்'

வெண்காழ்ப்பத்த

---

(௩௨௫.) களிறுநீ ரூடிய விடுநில மருங்கின்
வம்பப் பெரும்பெயல் வரைந்துசொரிந் திறந்தெனக்
குழிகொள் சின்னீர் குராஅ லுண்டலிற்
சேறு கிளைத்திட்ட கலுழ்கண் ணூறன்
௫ முறைமுறை யுண்ணு நிறையா வாழ்க்கை

௧. நீறு - புழுதி ; "நீறடங்கு தெரு" (சிறுபாண். ௨௦௧); "காம்பைப் படுநீருடி" பெரும்பாண். ௬௩.

௨. வம்பப்பெரும் பெயல்-புதியமழை; "வம்ப மாரியைக் காரென மதித் தே" (குறுந். ௬௬.) இறந்தென - போக.

௩. குரால் - ஒருவகைப்பசு; கோட்டானுமாம்.

௪. சேற்றைத் தோண்டுதலாலுண்டாகிய கலங்கியவூறல்நீரை ; "மணற் கிளைக்க நீரூறும்" திருவள்ளுவமாலை, ௩௧.

௫. "ஊண்முறையூட்டும்" புறநா : ௩௩௧ : ௮.

[1] முளவுமாத் தொலைச்சிய முழுச்சொ லாடவ
ருடும்பிழு தறுத்த [2] வொடுங்காழ்ப் படலைச்
சீறின் முன்றிற் கூறுசெய் திடுமார்
கொள்ளி வைத்த கொழுநிண நாற்ற
மறுகுடன் கமழு மதுகை மன்றத்
தலந்தலை யிரத்தி [3] யலங்குபடு நீழற்
கயந்தலைச் சிருஅர் கணைவிளை யாடு
[4] மருமிளை யிருக்கை யதுவே வெண்வேல்
வேந்துதலை வரினுந் தாங்குந்
தாங்கா வீகை நெடுந்தகை யூரே.

**திணையும் துறையும் அவை.**

**உறையூர் முதுகண்ணன்சாத்தனார்.**

(கூஉரு

---

சு. முளவுமா - முள்ளம்பன்றியை; தொலைச்சிய - கொன்ற; "முளவுமா வல்சி" (ஐங்குறு: கூசுச), "முளவுமாத் தொலைச்சிய பைந்நிணப் பிளவை' மலைபடு. கஎசு.

ச - சு. "கல்லறுத் தியற்றிய வல்லுவர்க் கூவல், வில்லேர் வாழ்க்கைச் சீறூர் மதவலி" புறநா. கூகக: க - உ.

எ. உடும்பிழுது - உடும்பினது நிணத்தை; "உடும்பின் விழுக்கு

நிணம்''

(புறநா. ௩௨௬: ௯ - ௧௦.) அறுத்த உடும்பிழுதையென்க ; ஒடுங்காழ்ப்படலை-

ஒடுமரத்தின் கழிகளாலாகிய கட்டுக்கதவு ; படலுமாம்.
மரம் ; "ஒடுமரக்கிளவி" தொல். உயிர். சூ. ௬௦.

ஒடு - ஒருவகை

அ. முன்றிலில். கூறுசெய்திடுமோர்-பிறர்க்குப் பகுத்துக் கொடுப்பாராய்.

௧0. மன்றத்து - பொதுவிடத்துள்ள.

௯-௧0. "நெய்ம்மறைக் கொளீஇய, மங்குன் மாப்புகை,மறுகுடன் கமழும்" புறநா. ௩௨௧: ௩ - ௪.

௧௧. அலந்தலை: "அலந்தலைமராமும்" (சிலப். ௧௧: ௭௫.) இரத்தி-மரம் ; இலந்தையுமாம் ; அலங்குதல - அசைதல். நீழலில்.

இத்தி

௧0 - ௧௧. "இரத்தி நீடியவகன்றலை மன்றம்" புறநா. ௩௪: ௧௨.

௧௨. வேட்டுவர்: புறநா. ௩௨௪: ௧ - ௭.

௧௩. மிளை - காவற்காடு ; புறநா. ௩௨௬: ௭.

௧௪. அரசன் தன்னிடத்தே வந்தாலும் தாங்குதற்குரிய.

௧௪ - ௫. "வரகுகடனிரக்கு நெடுந்தகை, யரசுவரிற்றாங்கும் வல்லாளன்னே" புறநா. ௩௨௭: ௭ - அ.

(௧௫) ஊர் (௧௩) இருக்கையது.

(பி - ம்.)—1 முழவுமா தொலைச்சிய' 2 'கொடுங்காழ்', 3 'இலங்குபடு' 4 'அருமுனை'

'தொடுங்காழ்'

---

(௩௨௬.) ஊர்முது வேலிப் பார்நடை வெருகி
னிருட்பகை வெரீஇய நாளிளம் பேடை
யுயிர்நடுக் குற்றுப் [1] புலாவிட் டரற்றச்
சிறையுஞ் செற்றையும் புடையுந ளெழுந்த
பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கத்துக்
[2] கவிர்ப்பூ நெற்றிச் சேவலிற் [3] றணியு
[4] மருமிளை யிருக்கை யதுவே மனைவியும்
வேட்டச் சிறாஅர் சேட்புலம் படராது
[5] படமடைக் கொண்ட குறுந்தா ளுடும்பின்
விழுக்குநிணம் பெய்த தயிர்க்கண் விதவை
யாணர் நல்லவை பாணரொ டோராங்கு
வருவிருந் தயரும் விருப்பினள் கிழவனு

---

க. வேலியைச் சார்ந்துள்ள காட்டுப்பூனையால; பார் நடை வெருகு-தான் கவர்ந்துகொள்ளுதற்குரிய கோழிமுதலியவற்றைப் பார்த்து மெல்ல நடத்தலை யுடையவெருகு; "வெவ்வாய் வெருகினைப்பூசை யென்றலும்" (தொல். மரபு. சூ. ௬அ) என்பதையும், 'படப்பை வேலியும் புதலும்பற்றி விடக்கிற்கு வேற் றுயிர்கொள்ளும் வெருகு' என்னும் அதன் பேராசிரியருரையையும் பார்க்க.

௧ - ௨. வெருகாகிய பகைக்கு அஞ்சிய கோழிப்பேடை, எழுவாய்.

௩. புலா - புலாலை ; வாயிலுள்ள தசையை அகநா. எ௬: ௧௪.

௪. சிறை - பக்கம். செற்றை - சிறுதூறு ; "செற்றைவாயில்" (பெரும் பாண். ௧௪௬.) புடையுநள் - அடித்துத் தூத்தலையுடையளாய்.

ரு. பருத்திப்பெண்டின்-பருத்திநூற்கும் மங்கையின்; "பருத்திப் பெண்டின்பனுவலன்ன" (புறநா. கஉரு: க.) விளக்கத்தாற்காணப்பட்டட.

சு. கவிர்ப்பூ - முள்ளுமுருங்கைப்பூ. சேவலின் - ஆண்கோழிபால; "கவிரலர் பூத்தசென்னி வாரணம்" (கல். பாயிரம். உ.) தணியும்-நீங்கும்.

(உ) கோழிப்பேடை (சு) அந்நடுக்கந்தணியும்.

எ. "அருமிளையிருக்கைய துவே" புறநா. கஉரு: கங.

அ. சேட்புலம் - நெடுந் தூரமாகிய இடம்.

கo. விழுக்காகியநிணம்; விழுங்குதற்குரியநிணமுமாம்; "விழுக்கொடு வெண்ணஞ்சு" (சீவக. கருஅச.) விதவை - கூழ்.

கூ - கo : பெரும்பாண். கருஉ - ரு.

கக. யாணர்-புதிது. நல்லவை - நல்ல உணவுகளை. ஓராங்கு-ஒருபடியாக.

கஉ. கிழவன் - தலைவன்.

கூ-கக. "உடும் பிழுதறுத்தவொடுங்காழ்ப்படலைச், சீறின் முன்றிற் கூறு செய்திடுமார், கொள்ளிவைத்த கொழுநிணநாற்றம்" புறநா. கஉரு: எ - கூ.

(எ) முனைவியும் (கஉ) விருப்பினள்.

(பி - ம்.)—1 'புலா விட்டியாற்றச்' 2 'கதிர்ப்பூ' 3 'தணிவும்' 4 'அருமுனை' 5 'படபடைக்கொண்ட'

மருஞ்சமந் தலைத் தாக்கிப் பெருஞ்சமத்
தண்ணல் யானை யணிந்த
கரு பொன்செ யோடைப் பெரும்பரி சிலனே.

**திணை - வாகை ; துறை - மூதின்முல்லை.**

**1 தண்காற் பூட்கொல்லனார்.** (௩௨௬

---

கங. தலைய - சிதைய; "அருஞ்சமஞ்சிதையத்தாக்கி (புறநா. எ௨: அ) "தலைந்த காஞ்சியொடு" பதிற். ௨௩: ௧௧.

கரு. ஓடை - நெற்றிப்பட்டம். ௧௪ - ரு. புறநா. ௩௩௪: அ - ௧௦.

(பி - ம்.)—1 'தண் காற்......பொற கொலலனார், 'மூடக்கொல்லனார்' 'தங்கான்முட கோலலரை', 'தங்கால தாட கோவலனார்'

---

(௩௨எ.) எருது காலுறா அ திளைஞர் கொன்ற
1 சில்விளை வரகின் புல்லென் குப்பை
தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்
பசித்த பாண ²ருண்டுகடை தப்பலி
ரு னொக்க லொற்கஞ் சொலியத் தன்னூர்ச்
சிறுபுல் லாளர் முகத்தவை கூறி
³ வரகுகட னிரக்கு நெடுந்தகை
யரசுவரிற் றூங்கும் வல்லா ளன்னே.*

**திணையும் துறையும் அவை.**

..................................................

க. கடாவிடுதலின்றி இளைஞரடித்த; "எருதுகாலுறாஅது" என்பது தொல். மொழி. சூ. அ - இளம். மேற்கோள்.

உ. சில்வினை - சிலவாகவிளைந்த. குப்பை - பொலி.

௩. தொடுத்தகடவர்க்கு-தன்னைவளைத்துக்கொண்ட கடன்காரர்களுக்கு; "தொடுத்துணக்கிடப்பினுங் கிடக்கும்" (புறநா. ௧௫௬:௪.) கொடுத்த மிச்சில-கொடுத்து மிஞ்சியவரகை.

௪. கடை - வாயில்.

௫. ஒக்கல ஒற்கம் சொலிய - சுற்றத்தாருடைய வறுமையை ஒழித் தற்கு ; 'ஒற்கம்' என்னு முரிச்சொல வறுமையாகிய குறிப்புணர்த்துவதற்கு மேற்கோள்; தொல். உரி. சூ. ௬௪ - சே ; ஷை ஷை ௬௨ - ந ; இ - வி. சூ. ௨௮௧ - உரை.

எ - அ. "வேந்துதலை வரினுந் தாங்கும், தாங்கா வீகை நெடுந்தகை"

புறநா. ௩௨௫: ௧௪ - ௫.

● மு. வாகைத்திணைத்துறைகளுள், 'புல்லாவாழ்க்கை வல்லாண் பக்கம்' (தொல் புறத்திணை. சூ. ௧௭ - இளம்) என்பதற்கும், 'அரும்பகை தாங்கு மாற்றல்' (ஷை ஷை ஷை ௨௧ - ந) என்பதற்கும் மேற்கோள்.

(பி - ம்.)—1 'சில்வினை' 2'உண்டுகன...தலொற்கஞ்' 3'வரகுகடனீர்க்கு'

## புறநானூறு மூலமும் குறிப்புரையும். ௪௫௫

(௩௨௮.) ......டைமுதற் புறவு [1] சேர்ந்திருந்த
புன்புலச் சீறூர் நெல்லுரி யாதே
வரகுந் திணையு முள்ளவை யெல்லா
மிரவன் மாக்களுக் [2] கீயத் தொலைந்தன

..........................டமைந் தனனே
யன்ன ளாயினும் [3] பாண நன்றும்
[4] வெள்ளத் திடும்பா லுள்ளுறை தொட......
களவுப் புளியன்ன விளை....................
..........................வா டுேன்கொழுங்குறை
கொய்குர லரிசி யொடு நெய்பெய் தட்டுத்
துடுப்பொடு சிவணிய களிக்கொள் வெண்சோ
றுண்டினி திருந்த பின்.....................
..........................தருகுவன் மாதோ
[5] தாளிமுத லீடிய சிறுநறு முஞ்ஞை
முயல்வந்து கறிக்கு முன்றிற்
சீறூர் மன்னனைப் பாடினை செலினே.

[6] திணையும் துறையும் அவை.

பங்கு.............................. (௩உஅ)

---

க. புறவு - முல்லைநிலம். உ. புன்புலம் - புன்செய்.

௩ - ௪. "வரகுந் தினையு முள்ளவை யெல்லா, மிரவன் மாக்க ளுணக் கொளத் தீர்ந்தென" புறநா. ௩௩௩: ௯ - ௧0.

எ. "குடப்பாற் சில்லுறை" புறநா. உஎ௬: ரு.

அ. களவுப்புளி - களாப்பழத்தின் புளிப்பு. ௧0. குரல - கதிர்.

௧௪. தாளி - ஒருவகைக் கொடி. (௧௬) செலின் (௧௩) தருகுவன்.

(பி - ம்.)—1 'சோர்நதிந்த' 2 'ஈயாதநா...டமைந்த' 3 'மன்ன' 4 'வெள் ளத்திடும்' 5 'தா ழ் முதல' 'இதுவுமது'

---

(௩உ௯.) இல்லடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்
புடைநடு கல்லி னாட்[1] பலி யூட்டி
[2] நன்னீ ராட்டி நெய்ந்நறைக் கொளீஇய

க. வீட்டிலட்ட கள்ளையுடைய; "இல்லடுகள்ளின்றோப்பி பருகி" பெரும்பாண். கசஉ.

உ. நடுகல்லிற்கு விடியற்காலப் பலியையூட்டி.

௩. நறை - தூபம்; "நறையும் விரையும்" (குறிஞ்சி. எ). கொளீஇ - கொளுத்துதலால் ; சேர்த்தலால.

(பி - ம்.)—1 'பலியூட்டி நெய்ந்நறை' 2 'நன்னராட்டி.'



மங்குன் மாப்புகை மறுகுடன் கமழு
மருமுனை யிருக்கைத் தாயினும் வரிமிடற்
றரவுறை புற்றத் தற்றே நாளும்
புரவலர் புன்க ணோக்கா திரவலர்க்
கருகா தீயும் வண்மை
யுரைசா னெடுந்தகை யோம்பு மூரே.*

திணையும் துறையும் அவை.

மதுரை அறுவைவாணிகன் இளவேட்டனார்.

(௩உகூ)

---

௪. மங்குல் - மேகம். உடன் - ஒருங்கு.

ரு. முனை - முதன்மை. ஊர் இருக்கையை யுடையதாயினும்.

சு. அரவுறையும் புற்றைப்போலவது ஊர் ; "நல்லராவுறையும் புற்றம் போல" (புறநா. ௩0கூ: ௩.) ஊர் அணுகுதற்கரியதென்றபடி.

எ - கூ. ஒ. புறநா. ௩உ0: கரு - அ ; ௩௱எ: அ.

* ஒ. கல்நட்டுக் காலகொண்டதற்கு மேற்கோள்; தொல். புறத்திணை. சூ. ரு - ந.

(௩௩௰) வேந்துடைத் தானை முனைகெட நெரிதர
வேந்து[1] வாள் வலத்த னொருவ னாகித்
தன்னிறந்து வாராமை விலக்கலிற் பெருங்கடற்
காழி யனையன் மாதோ வென்றும்
பாடிச் சென்றோர்க் கன்றியும் வாரிப்
புரவிற் காற்றாச் சீறூர்த்
தொன்மை [2]சுட்டிய வண்மை யோனே.*

**திணையும் துறையும் அவை.**

**மதுரைக்கணக்காயனார்.**

(௩௩௰)

---

க. முனை - சண்டை. நெரிதர - நெரிய.

௩. அப்பகைவர் சேனையானது தன்னைக் கடந்துவராதபடி தடுத்தலால்.

௪. ஆழி - கரை. ௩ - ௪. குறள், ௯௮௯, பரிமேல். மேற்.

௫. வாரி - வருவாய்.

௬. புரவு - இறையிலிநிலம்; புறநா. ௨௬ : ௯; ௩௭௯ : ௬.

* மு. வஞ்சித் திணைத்துறைகளுள், "வருவிசைப்புனலைக் கற்சிறைபோல ஒருவன்றாங்கிய பெருமை' என்பதற்கு மேற்கோள்; எ - இளம்; ஷ ஷ ஷ அ - ந. தொல். புறத்திணை. ௫

(பி - ம்.)—1 'வாள் வல்லத்தன்', 'வல்லத்தன்' 2 'சூடியவண்மை'

(௩௩௧.) கல்லறுத் தியற்றிய வல்லுவர்க் கூவல்
வில்லேர் வாழ்க்கைச் சீறூர் மதவலி
நனிநல் கூர்ந்தன னாயினும் பனிமிகப்
புல்லென் மாலைச் சிறுதீ ஞெலியுங்
கல்லா விடையன் போலக் குறிப்பி
னில்லது படைக்கவும் வல்ல னுள்ளது
தவச்சிறி தாயினும் மிகப்பல ரென்னா
[1] னீடெடும் பந்த ரூண்முறை யூட்டு
மிற்பொலி மகடூஉப் போலச் சிற்சில
வரிசையி னளிக்கவும் வல்ல னுரிதினிற்
காவன் மன்னர் கடைமுகத் துகுக்கும்
போகுபலி வெண்சோறு போலத்
[2] தூவவும் வல்லனவன் றூவுங் காலே.

**திணையும் துறையும் அவை.**

[3] **உறையூர் முதுகூத்தனார்.**

**(௩௩௧)**

---

க. இயற்றியவல்லுவர்க்கூவல் - கிணறு ; "வல்லூற் றுவரி தோண்டி" (**பெரும்பாண்.** ௯௭ - ௮) ; "குடம்புகாக் கூவற் கொடுங்கானம்" **சீலப்.** **௨௧: கர்வற்பெண்டுசொல்.**

உ. விற்போராகிய உழவுத் தொழிலால் வாழும் வாழ்க்கையையுடைய தலைவன்; "வில்லுழுதுண்மார்" (**புறநா. ௧௭௦.**) மதவென்பது வலியை யுணர்த்துவதோ ருரிச்சொல; மதவலி - மிக்க வன்மையையுடைய தலைவன்; "மதவலி விடுப்பவேலி" **சீவக. ௨௦௪.**

௩. மிகவறுமையையுற்றானாயினும். ௪. ஞெலியும் - கடையும்.

௪-ரு. "இடையன் பொத்திய சிறுதீவிளக்கத்து". (புறநா. ௩௨௪: ௧௧.) "இடையன்......ஞெலிகோற்கொண்ட பெருவிறல் ஞெகிழிச் செந்தீ" பெரும் பாண். ௧௭௫ - ௮.

௮. பந்தரில. முறை - வரிசை ; "முறையினுண்ணு நிறையாவாழ்க்கை" புறநா. ௩௨௫: ௬.

௯. மகடூஉ - மனைவி ; புறநா. ௩௩௩: ௮.

௯-௯. "குடநீ ரட்டுண்ணு மிடுக்கட் பொழுதுங்,கடனீ ரறவுண்ணுங் கேளிர் வரினுங், கடனீர்மை கையாறுக் கொள்ளு மடமொழி, மாதர் மனைமாட்சி யாள்" நாலடி. ௩௮௨.

௯ - ௧௩. புறநா. ௩௩௪: ௭ - ௧௧.

(பி - ம்.)—1 'நீணெடுபந்தருண்' 2 'தூஉவும்' 3 'உறையூர்முதுகூத்தன்'

---

# ௪௪௮ புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

(௩௩௨.) பிறர்வேல் போலா தாகி யிவ்வூர்
மறவன் வேலோ பெருந்தகை யுடைத்தே
1 யிரும்புற நீறு மாடிக் கலந்திடைக்
2 குரம்பைக் கூரைக் கிடக்கினுங் கிடக்கு
௫ மங்கல மகளிரொடு மாலை 3 சூட்டி

யின்குர [4] லிரும்பை யாழொடு ததும்பத்
தெண்ணீர்ப் படுவினுந் தெருவினுந் திரிந்து
மண்முழு தழுங்கச் [5] செல்லினுஞ் [6] செல்லுமாங்
கிருங்கடற் றூனே வேந்தர்
பெருங்களிற்று முகத்தினுஞ் செலவா னுதே.*

திணையும் துறையும் அவை.

[7] விரியூர் நக்கனூர்.

(௩௩௨)

---

௩. நீறு - புழுதி. ௪. குரம்பை - சிறுகுடிலின்.

௫. குரல் - மகளிர்இசை. இரும்பை - பெரியவை; யாழுறை. ததும்ப - ஒலிக்க.

௭. படு - மடு. ௧0. செலவுஆனுது - செல்லுதல்தவிராது.

* ழ. பாடாண்டிணைத் துறைகளுள், 'மாணுர்ச்சுட்டியவாண்மங்கலம்' என்பதற்கு இதனைமேற்கோள்காட்டினர் இளம்பூரணர் (தொல். புறத்திணை ௬-௩0); உழிஞைத்திணைத்துறைகளுள் 'வென்றவாளின்மண்ணல்' என்பதற்கு "ஒன்றெனமுடித்தலான் இருவர்வேற்குஞ் சிறுபான்மை மண்ணுதல கொள்க" என விசேடவுரைகூறி இதனை மேற்கோள் காட்டினர் நச்சினூர்க்கினியர்; ஷை ஷை ௬. ௧௩.

(பி - ம்.)—1 'இரும்புக நீருமாடிக் கலத்திடை' 2 'குரம்பைக் கூணராக் கினுங் கிடக்கு' 3'சூடி' 4'இகும்பை யாழெடுத்தியம்ப', 'இரும்பெயர்' 5'சொல் லினுஞ்' 6'செல்லுங்கண்ணுறின்', செலலுமாங்குகடற்றூனே' 7'விரியூககக்கனூர்'

---

(௩௩௩.) நீருட் பட்ட மாரிப் பேருறை
மொக்கு ளன்ன பொகுட்டுவிழிக் கண்ண
கரும்பிடர்த் தலைய பெருஞ்செவிக் குறுமுய
லுள்ளூர்க் குறும்புதற் றுள்ளுவன வுகளுந்

---

௧. உறை - துளி. ௨. மொக்குள் - சேற்றிலெழுந்த கொப்புளம்.
௩. "நெடுஞ்செவிக் குறுமுயல்" புறநா. ௩௩௪: ௨; ௩௩௯: ௪.
௧ - ௩. "சிறியிலை நெல்லிக் காழ்கண் டன்ன, குருவிழிக்கண்ண கூரலங் குறுமுயல்" அகநா. ௨௮௪: ௧-௨.
௪. புதல் - புதரில்.

## புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

**௩௩௪**

தொள்ளை மன்றத் தாங்கட் படரீ
யுண்கென வுணரா வுயவிற் றாயினுந்
[1] தங்கினிர் சென்மோ புலவிர் நன்றுஞ்
சென்றதற் கொண்டு மனையோள் விரும்பி
வரகுந் திணையு முள்ளவை யெல்லா
மிரவன் மாக்க ளுணக்கொளத் தீர்ந்தெனக்
குறித்துமா றெதிர்ப்பை பெறாஅ மையிற்
குரலுணங்கு விதைத்திணை யுரல்வாய்ப் பெய்து
சிறிது [2] புறப்பட்டன் றோவில டன்னூர்
வேட்டக் குடிதொறுங் கூட்டு..............
.................................. [3] உடும்புசெய்
பாணி நெடுந்தேர் [4] வல்லரோ ரோ

ரு. தொள்ளை - துவாரம்; மன்றம் - இரவலர் தங்குதற்குரியது.

சு. உயவு - வருத்தம்.

எ. சென்மோ - செல்லும் ; செல்லுமென்னுமேவற்பன்மை உயிர்கெட்டு ஓகாரம்பெற்றுவந்தது ; "வருங்குலங் கேண்மோ" (மணி. கூ: கூ) என்றாற் போல.

அ. மனையோள் - தலைவி (புறநா. ௩௩௧: அ; ௩௩௪: ரு.) சென்றதற் கொண்டு - வந்ததனால்.

௧௦.
திர்ப்பை :

தீர்ந்தென - தீர்ந்தனவாக. குறித்துமாறெதிர்ப்பை - குறியெ "குறியெதிர்ப்பையாவது அளவுகுறித்து வாங்கி அவ்வாங்கியவாறே எதிர்கொடுப்பது" என்பர் (குறள், உ௨௧ - பரிமேல்); "கூற்றுங், குறியெ திர்ப்பை கொள்ளுந் தகைமைத்தே......களிறு" முத்தொள்ளாயிரம்.

௯ - ௧௦. "வரகும் தினையு முள்ளவை யெல்லா, மிரவன்மாக்களுக் கீயத் தொலைந்தன" புறநா. ௩௨அ: ௩ - ௪.

அ - ௧௩. "இலலது படைக்கவும் வல்ல னுள்ளது, தவச்சிறி தாயினு மிகப்பல ரென்னு, ணிணெடும் பந்த ருண்முறை யூட்டு, மிற்பொலி மகடூஉப் போலச் சிற் சில,வரிசையி னளிக்கவும் வல்லன்", "மனையோள், பாணரார்த்த வும் பரிசில ரோம்பவு, மூனொலி யரவமொடு கைதூவாளே" புறநா. ௩௩௧: ௬ - ௧௦; ௩௩௪: ரு - எ.

௧௪. வேட்டக்குடி - வேட்டுவர் வீடு.

௧௫ - ௬. உடும்புசெய்பாணி - உடும்புத்தோலாற் செய்த கைச்சரடு.

௧எ. வம்பு - கச்சு.

(பி - ம்.)—1 'தங்கி நீர்' 2 'புறப்படனரேயிலனே' 3 'உழு இமபு செய்' 4 'வலவரோரே'

மண்பது மன்னு மதுவே
பரிசில் மன்னுங் குரிசில்கொண் டதுவே.

**திணையும் துறையும் அவை.**

................................... (கூகூகூ)

கக. கொண்டது பரிசில் - பகைவரோடு போர்செய்ததற்காக அரசரிடம் பெற்றபொருளே பாணர்முதலியோர்க்கு அவன் கொடுக்கும் பரிசிலாகும்.

---

(கூகூச.) காமரு பழனக் கண்பி னன்ன
தூமயிர்க் குறுந்தா ணெடுஞ்செவிக் குறுமுயல்
புன்றலைச் சிறாஅர் மன்றத் தார்ப்பிற்
படப்பொடுங் கும்மே.........பின்பு.........
.........................னூரே [1]மனையோள்
பாண ரார்த்தவும் பரிசில [2]ரோம்பவு
மூணொலி யரவமொடு [3]கைதூ வாளே
யுயர்மருப் பியானைப் புகர்முகத் தணிந்த
பொலம்.................... ............ப்
[4] பரிசில் பரிசிலர்க் கீய
வுரவுவேற் காளையுங் கைதூ வானே.

**திணையும் துறையும் அவை.**

**மதுரைத் தமிழக்கூத்தனார்.** (கூகூச)

---

க. கண்பு-ஒருவகைக் கோரை; "கண்பின், புன்காய்ச் சுண்ணம் புடைத்த மார்பின்" (**பெரும்பாண்.** உஉ௦-உக), "களிறுமாய் செருந்தியொடு கண்பமன்

றார்தர்'' (மதுரை. கஎஉ), "கண்பமல் பழனங் கமழ" (மலைபடு. சஞ்ச), "கண்பகத்தின் வாரணமே" தே. திருஞா. தோணிபுரம், "வண்டரங்க" ந.

உ. புறநா. நநந: ந.

ச. படப்பு - படப்பை ; வைக்கோற்போர்.

ந - ச. "புன்றலைச் சிறாஅர் வில்லெடுத் தார்ப்பிற்......மன்றிற் பாயும் வன்புலத் ததுவே" புறநா. நஉஉ : ச - சு.

சு. ஆர்த்த-நிறைய உண்பிக்க; "ஏதிலா ரார்த் தமர்பசிப்பர்" குறள், அநஎ.

எ. ஊழெலியரவம்-ஊழுலுண்டாகிய ஆரவாரம்; "புள்ளிமிழ்ந் தன்ன வூழெலியரவம்" (புறநா. கஎந :ந-ச.) கைதூவாள் - கையொழியாள்; "கள்

ளுண வாட்டியுங் கைதூவாளே" புறத்திரட்டிற்கண்டது இது.

(ரு) மனையோள் (எ) கைதூவாள். கக. காளை - தலைவன்.

அ - கக. "அண்ணல்யானை யணிந்த, பொன்செ யோடைப் பெரும்பரிசிலனே" புறநா. நஉசு: கச- ரு.

(பி - ம்.)—1 'மனையோர்' 2 'ஓம்பும்' 3 'கைத்தூஉவாளே' 4 'பரிசிலர்'

(௩௩௫.) அடலருந் துப்பின்.....................

.........................குருந்தே முல்லையென்
றிந்நான் கல்லது பூவு மில்லை
கருங்கால் வரகே யிருங்கதிர்த் தினையே
சிறுகொடிக் கொள்ளே பொறிகிள ரவரையொ
டிந்நான் கல்ல துணவு மில்லை
1 துடியன் பாணன் பறையன் கடம்பனென்
றிந்நான் கல்லது குடியு மில்லை

---

க. துப்பு-வலி. ௪. "வன்பாலாற் கருங்கால் வரகின்" **புறநா.** ௩௮௪: ௪.
௭ - ௮. "இனிப் பலவயினானும்......முடிபின செய்யுளுளெனவே, சில
வயினான் அஃறிணைவிரவாது உயர்திணையானெண்ணி அஃறிணை முடிபிற்றாகலு
முண்டு, செய்யுளகத்து ; உ - ம் : 'பாணன்......குடியுமில்லை' எனவரும்"
(**தொல்.** கிளவி. சூ. ருக - இளம்); "பலவயினானு மென்றதனாற் சிலவயினாற்
றிணைவிரவாது உயர்திணையானெண்ணி அஃறிணையான் முடிவனகொள்கவென்
பது; உ-ம்: 'பாணன்பறையன்......குடியுமில்லை' எனவரும்" (ஷை ஷை ஷை
ருக - **கல்.**) "பாணன்......குடியுமில்லை' என......**உரையாசிரியர்** கூறினாரா
லெனின், பாணன் முதலாயினாரைக் குடியென்று சுட்டியவழிக் குடிக்கு
ஏற்ற தொகைகொடுத்தல் வழுவன்மையான், அவ்வுரை போலியுரை
யென்க ; குடியென்று சுட்டாதவழிப் பாணன்பறையன்றுடியன் கடம்ப
னென்று அந்நாலவருமல்லது குடியில்லையென்றேயாம்" (ஷை ஷை ஷைருக-
சே); "பாணன்பறையன்......குடியுமில்லையென்றது பாண்குடி பறைக்குடி
யெனக் குடியைச்சுட்டிநில்லாதுபாணன்பறையன் எனப்பால்காட்டி நிற்றலான்
உயர்திணைப்பொருள் நின்று அஃறிணை முடிபு கொண்டனவேயாம்" (ஷை ஷை
ஷை ருக - ந); "பாணன் பறையன்......குடியுமில்லை: என்பது உயர்திணை
அஃறிணையான்முடிந்தது ; இவ்வழு யாண்டு அமைக்கப்படுமோவெனின், அது
வழுவாயினன்றே அமைக்கவேண்டுவது; குடியென்பதனை எல்லாவற்றோடுங்கூட்
டியுரைக்கப்படுதலின் வழாநிலையாமென்க" (**நன்.**மயிலை. சூ. ௩௭௭); "பாணன்
...குடியுமில்லை: என உயர்திணையெண்ணி அஃறிணை முடிபாயினவாய வழு
யாண்டமைக்கப்படுமெனிற் குடியென்பதனைப் பாணன்முதலனோடும் கூட்டி
யுரைக்கப்படுதலின் வழாநிலையாமென்க" (நன் - வி. சூ. ௩௭௮); "பாணன்...

யுரைக்கப்படு... குடியுமில்லை: எனத் திணை விரவாது உயர்திணையானென்னா அஃறிணையான் முடிந்த இவ்வழு யாண்டமைக்கப்படுமோ வெனின், பாணன் முதலாயினாரைக் குடியென்று சுட்டியவழிக் குடிக்குற்ற தொகைகொடுத்தல் வழுவன்மையான் அமைத்தல் யாண்டையதென்க" (இ - வி. சூ. ௨௯௮ - உரை); "மக்கட்சுட் டென்புழி......அங்ஙனமுணர்த்திற்றேல், பாணன்......குடியுமிலலை : என் புழிப்பாணன்முதலியனபோல மக்களென்பது ஆண்டு அஃறிணைச்சொல்லாதல வேண்டும் ; வேண்டவே, 'அஃதலபிறவே' என அஃறிணைச்சுட்டுப்பெயராற் கூறுது, 'அவரலபிற' என்றல திணைவழுவாய் முடியுமாதலின் அஃதாசிரியர் கருத்தன்றென்றொழிக" தோல். சூத்திரவிருத்தி.

(பி - ம்.)—1 'பாணன் பறையன் றுடியன் கடம்பனென்று'



யொன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி
யொளிறேந்து மருப்பிற் களிறெறிந்து வீழ்ந்தெனக்
கல்லே பரவி னல்லது
நெல்லுகுத்துப் பரவுங் கடவுளு மிலவே.

**திணையும் துறையும் அவை.**

**1 மாங்குடிகிழார்.**

(௩௩௫)

---

௧0. புறநா. ௩0௧: ௯-ஆம்அடிக்குறிப்பைப்பார்க்க.

௧௧ - ௨. 'பரவுதல்' என்னுமுரிச்சொல் வழுத்துதலாகிய குறிப்புணர்த்தி யதற்குமேற்கோள்; தொல். உரி. சூ. ௮௯ - சே ; ஷை ஷை ௮௭ - ந; இ - வி. சூ. ௨௮௧ - உரை.

(பி - ம்.)—1 'மாறு குடிகிழார்'

(கூகூசு.) வேட்ட வேந்தனும் [1]வெஞ்சினத் தினனே
[2] கடவன கழிப்பிவ டந்தையுஞ் செய்யா
னெளிறுமுகத் தேந்திய வீங்குதொடி மருப்பிற்
களிறு கடிமரஞ் சேரா சேர்ந்த
வொளிறுவேன் மறவரும் [3]வாய்மூழ்த் தனரே
யியவரு மறியாப் பல்லியங் கறங்க
வன்னோ, பெரும்பே துற்றன் [4]றிவ் வருங்கடி மூதூ
ரறனிலண் மன்ற தானே விறன்மலை
வேங்கை வெற்பின் விரிந்த கோங்கின்
முகைவனப் பேந்திய முற்றா விளமுலைத்
தகைவளர்த் தெடுத்த நகையொடு
பகைவளர்த் திருந்தவிப் [5]பண்பி லூயே.

திணை - காஞ்சி ; துறை - மகட்பாற்காஞ்சி.

பரணர்.

(கூகூசு)

---

க. வேட்ட - மணஞ்செய்ய விரும்பிய. உ. கழிப்பு - கழித்தலை.

க - உ. புறநா. கூசசு : க - கூ.

ச. கடிமரம் - காவன்மரம். ரு. மூழ்த்தனர் - மூடினர் ; முகிழ்த்தனர்.

சு. இயவர் - வாச்சியக்காரர்.

எ. பெரும் பேதுற்றன்று - பெரிய மயக்கத்தையடைந்தது.

அ. மன்ற - நிச்சயமாக. கo. முகை - அரும்பு.

கக. நகை - மகிழ்ச்சி. (கஉ) தாய் (அ) அறனிலள்.

(பி - ம்.)—1 'பெருஞ்சினத்தனே' 2 ' கெடவனகறிபபிவள் ' 3

'வாயு
மூழ்த்தனரே' 4 'இலலங் கடிமூதுர ரனிலமனர' 'பண்பிற்றுமே'

# புறநானூறு மூலமும் குறிப்புரையும்.

சுருக

(கூகூஎ.) [1] ஆர்கலி யினனே சோணாட் டண்ணல்
கவிகை மண்ணாள் செல்வ ராயினும்
வாள்வலத் தொழியப் [2]பாடிச் சென்றார்
வாரோ கமலர................................
வீத லானா விலங்குதொடித் தடக்கைப்
பாரி பறம்பிற் பனிச்சுனை போலக்
காண்டற் கரிய ளாகி மாண்ட
பெண்மை நிறைந்த பொலிவொடு மண்ணிய
துகில்விரி கடுப்ப நுடங்கித் தண்ணென
வகிலார் நறும்புகை யைதுசென் றடங்கிய
கபில [3]நெடுநகர்க் கமழு நாற்றமொடு
மனைச்செறிந் தனளே வாணுத லினியே
யற்றன் றாகலிற் றெற்றெனப் போற்றிக்
காய்நெற் கவளந் தீற்றிக் காவுதொறுங்
கடுங்கண் யானை காப்பன ரன்றி
வருத லானார் வேந்தர் [4]தன்னையர்
பொருசமங் கடந்த வுருகெழு நெடுவேற்

குருதி பற்றிய வெருவரு [5]தலையர்
மற்றிவர் மறனு மிற்றாற் றெற்றென
உ௦ யாரா குவர்கொ ல்லமே நேரிழை

---

க. அண்ணல் - தலைவன். ரு. ஈதல் ஆனு - கொடுத்தல் தவிராத.

சு. "பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்" (களசு) என இச்சுனை பாராட்டப்பட்டுள்ளது.

முன்னும்

உ - சு. அரசராக இருந்தாலும் போர்செய்தலை யொழித்துப் புகழ்ந்து பாடிக்கொண்டுவருவாராயின், அவர்களுக்கு வேண்டியவற்றைக் கொடுக்குமியல் பினனென்று பாரியின்கொடைச்சிறப்புக்கூறினர்; புறநா. க௦கூ - ஆம்பாட்டாலும் விளங்கும்.

சு - எ "பொன்னணி திகிரியஞ் செல்வன்பொற்புடைக், கன்னியமகளிரிற் காண்டற் கரியன, நன்மணி புரிதகை வாவி நான்குமா" சீவக. கஉ௦கூ.

அ. பெண்மை - அமைதித்தன்மை; சீவக. ௩௫௫ - ந.

கூ - க௦. விரிந்தவுகில புகைக்குவலம.

கக. பாடினோர்பெயர் இதிற்குறிப்பிக்கப்பெற்றுள்ளது.

கஉ. வாணுதல - கன்னி. கச. தீற்றி - உணபித்து; சீவக. ௬க௦ரு.

கசு. வேந்தர் - மணம் பேசவந்த அரசர். தன்னையர் - தமையன்மார்.

(பி - ம்.)— 1 'ஆர்கலிவினனே சேணுட்டண்ணல்' 3 'நெடுநககா' 4 'தன்னையலர்' 5 'தலைய'

2 'பாடிச்சேரார்'

அஇச புறநானூறு மூலமும்

குறிப்புரையும்.

யுரித்தல் பல்சுணங் கணிந்த
மருப்பிள வனமுலை ஞெமுக்கு வோரே.

திணையும் துறையும் அவை.
கபிலர். (௩௩௭)

௨௧. உரித்துஅல் - உரியதல்லாத.
௨௨. ஞெமுக்குவோர் - அழுத்துவோர்; சீவக. ௨௫௫௨.

(௩௩௮.) ஏர்பரந்தவய னீர்பரந்தசெறுவி
னென்மலிந்தமனைப் பொன்மலிந்தமறுகிற்
படுவண் [1] டார்க்கும் பன்மலர்க் காவி
னெடுவே ளாதன் போந்தை யன்ன
பெருஞ்சீ ரருங்கொண் டியளே கருஞ்சினை
வேம்பு மாரும் போந்தையு மூன்று
மலைந்த [2] சென்னிய ரணிந்த வில்லர்
கொற்ற வேந்தர் வரினுந் தற்றக
வணங்கார்க் கீகுவ னல்லன்வண் டோட்டுப்
பிணங்குகதிர்க் கழனி நாப்ப ணேமுற்
[3] றுணங்குகல னாழியிற் றோன்று
மோரெயின் மன்ன னொருமட மகளே.

௪. போநதை - ஓரூர்.
௫. கொண்டிச்சீரள் - மிகுதியான சீரையுடையள்;
"அன்பதாய்க், கொண்டி யாயின வாறென்றன் கோதையே" தே. திருநா.

திருவாரூர், 'கொக் கரை' எ.

சு. ஆர் - ஆத்தி. போந்தை - பனை.

ஞ - சு. கருஞ்சினைவேம்பு: "கருஞ்சினை, யரவாய்வேம்பு" பொருந. கசஉ - ச.

அ. கொற்றம் - அரசுரிமை. தற்றக - தனக்குத்தக.

சு - கூ விரும்புவோர் பாண்டியன்முதலிய முடிமன்னர் மூவராயிருப்பி னும் தன்னை வணங்கார்க்குத் தன்மகளை ஈவானல்லன் இவன்.

கo. கதிர் - நெற்கதிர்.

கக. உணங்குதல் - உலர்தல். கலன் - கப்பல்; ஆழி - கடல்.

கஉ. எயில - மதில், ஓரெயின்மன்னன்: அகநா. ருஎரு: கஅ. கo

உவமம்.

- கஉ. சூழ்நதகழனிக்குக் கடலும் எயிலுக்குப் புறமுலர்நத கப்பலும் "மருதநிலத்து மதிலாதல்,....அகநாடுபுக்கவருப்பம் வெளவி எனப்

(பி - ம்.)—1 'ஆர்க்குங்காவிற்பஃளி, நெடுவேலாதன்' 2 ' ரணிந்த' 3 'உணங்குக னுழியிற', 'உணங்குகராழியிற்'

செனனியா

# புறநானூறு மூலமும் குறிப்புரையும்.



திணையும் துறையும் அவை.

குன்றூர்கிழார்மகனர்.

(கூகூஅ)

பாட்டிற் கூறியவாற்றானும், பிணங்குகதிர்க் கழனி. .
.மன்னனென்றமையானும் ...உணர்க" தொல். புறத்திணை. சூ. கூ. ந.

---

(௩௩௯.) வியன்புலம் படர்ந்த பல்லா [1] நெடுவேறு
மடலை மாணிழ லசைவிடக் கோவலர்
வீததை முல்லைப் பூப்பறிக் குந்து
குறுங்கோ லெறிந்த நெடுஞ்செவிக் குறுமுய
னெடுநீர்ப் பரப்பின் வாளையொ டுகளுந்து
தொடலை யல்குற் றொடித்தோண் மகளிர்
கடலாடிக் கயம்பாய்ந்து
கழிநெய்தற் பூக்குறூஉந்து
பைந்தழை துயல்வருஞ் செறுவிறற......
..............................லத்தி
வளர வேண்டு மவளே யென்று
[2] மாரம ருழப்பது மமரிய ளாகி
முறஞ்செவி யானை வேந்தர்
மறங்கெழு நெஞ்சங் கொண்டொளித் தோளே.

திணையும் துறையும் அவை.

.........................................

(௩௩௪)

---

௧. புலம் - மேய்தற்குரிய நிலம். ௨. அசைவிட - அசையிட.

௧ - ௨. ஏறு அசைவிட.

௩. பூப்பறிக்குநது - பூக்களைப்பறிக்கும் ; "புதன்முல்லைப்

பூப்பறிக் குந்து” புறநா. கூறுஉ: ச.

ச. கோலாலெறிநத. ரு. உகளுநது - துள்ளும்.

சு. தொடலை - மணிக்கோவைகளால் தொடுககப்பட்ட மேகலை.

அ. பூக்குறாஉநது - பூக்களைபபறிக்கும் ; குறுதல் - பறித்தல்.

கஉ. அமரியளாகி - விரும்பியவளாய்.

கங. முறம்போலும் காதுகளையுடையயானை; “முறஞ்செவி வாரணம்” (**கலி** : சஉ, **சிலப்**. கo: உசஅ) ; “முறஞ்செவி யானையுந் தேரு மாவும்” **மணி**. கக: கஉக.

(பி - ம்.)—1 ‘வெறறி, மடலை’ 2 ‘ஆரமொழிப்ப தவுமமரிய’



(கூசo.) அணித் [1] தழை நுடங்க வோடி [2] மணிப்பொறிக்
[3] குரலங் குன்றி கொள்ளு மிளையோள்
மாமகள்.............................
.......................லென வினவுதி கேணீ
[4] வெடுப்பவெ.........................
.........................மைந்தர் தந்தை
[5] யிரும்பனை யன்ன பெருங்கை யானை
கரந்தையஞ் செறுவிற் பெயர்க்கும்
பெருந்தகை மன்னர்க்கு வரைந்திருந் தனனே.

திணையும் துறையும் அவை.

அ...........................

(கூசo)

